ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

| சிலம்பு ய | மெய்கண்டான் யாண்டு-எாசுூ புரட்டாசித் திங்கள் 1932ஆ செப்டம்பர்ரூ—அக்டோபர்ரூ | பரல் சுூ |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

### திருப்பாதிரிப்புலியூர்

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத்துகந் தான்மனத் துள்ளிருக்க
ஏன்றா னிமையவர்க் கன்பன் றிருப்பா திரிப்புலியூர்த்
தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங்களுக்கே.

பதவுரை:—

உலகம் மூன்றாய்—உலகங்களை நிலவுலகம் மேலுலகம் பாதாளவுலகம் என மூன்றாகப்,

படைத்து உகந்தான்—படைத்தும் (காத்தும் அழித்தும் உயிர்களுக்கு அருள் செய்து) மகிழ்கின்றவனும்,

இமையவர்க்கு அன்பன்—தேவர்களுக்கு அன்புடையவனும்,

எனக்கு—தமியேனாகிய எனக்கு,

மனத்துள்— (எனது) உள்ளத்தினிடத்து,

ஈன்றாளும் ஆய்—என்னைப் பெற்ற தாயாகியும்,

எந்தையும் ஆய்—எனது தந்தையாகியும்,

உடன் தோன்றினர் ஆய்(உம்) — என் உடன் பிறந்தவராகியும்,
இருக்க — இருந்து,
என்றுன் — என்னை அடிமையாக ஏற்றுக்கொண்ட சிவபெருமான்,
திருப்பாதிரிப்புலியூர் — திருப்பாதிரிப்புலியூர் என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டருளிய,
தன்னடியோங்களுக்கே — தனது அடியார்களாகிய எங்களுக்குமட்டும்
தோன்றாத் துணையாயிருந்தனன் — அவர்களது உள்ளத்தில் (பேரொளியாய் விளங்கி நின்று) வேறறநிற்குந் துணைவனுயிருக்கின்றான்.

விளக்கவுரை :—

உலகம் மூன்றுய்ப் படைத்து உகந்தான் — உலகங்கள் மூன்றுகவும், ஏழாகவும், பதினுன்காகவும் பகுத்துச் சமயநூல்களிற் கூறப்படுகின்றன. உகக்கின்றான் என முக்காலத்தையுங் குறிக்கும் நிகழ்காலத்தாற் கூறற்பாலது இயல்புபற்றி யுகந்தான் என இறந்த காலத்தாற் கூறப்பட்டது. (நன்னூல்-பொதுவியல்-சூத்-௫௫). எல்லாவுலகங்களிலுள்ள உயிர்களைப் பக்குவம் அடையச்செய்து பேரின்பம் அளித்தல் சிவபெருமானுக்குப் பெருமகிழ்ச்சியாதலின் அவனைப் படைத்து உகந்தான் என அடிகள் கூறினர்.

படைத்து — இனம்பற்றிப் படைத்தலுடன் காத்தலும் அழித்தலும் கொள்ளப்படும். இம் மூன்று தொழில்களுடன் மறைத்தல் அருளல்களைச் சேர்த்துக் கூறுதலுமுண்டு. மறைத்தலும் அருளலும் மூன்று தொழில்களுள் அடங்கும்.

இமையவர்க்கு அன்பன் :— தேவர்கள் பொதுவாக உயிர்கள் பொருட்டுச் சிவபெருமான் செய்கின்ற முத்தொழில்களிலுங் கலந்து வேண்டுவன செய்து உயிர்களுக்கு நலம் புரிகின்றவர்கள் ஆதலின் அவர்களுக்குச் சிவபெருமானை 'அன்பன் என்றார்.

என் ஈன்றாளும் ஆய் எந்தையும் ஆய் உடன் தோன்றினராய் — எம் + த் + ஐ = எந்தை (த் = எழுத்துப்பேறு) = எனது தந்தை. பிறந்த குழந்தைகள் தாய் மூலமாகத் தந்தையை அறிதலின் ஈன்றாள் என்பது முதலாவது கூறப்பட்டது.

எவன் ஒருவனுக்குத் தாய் ஒருத்தியாயும், தந்தை ஒருவனும் இருந்தும் உடன் பிறந்தார் மட்டும் பலராயிருத்தல் கூடுமாதலின் அடிகள் ஈன்றாளையும் எந்தையையும் ஒருமையிலும், உடன்றோன்றினரைப் பன்மையிலுங் கூறினர். உலகில் ஒருவனுக்குத் தாய்தந்தை உடன்பிறந்தார்கள் மூவரும் உடற்றொடர்பினாலே ஒரு பிறப்பிற் சிறந்த துணைவர்களாயிருத்தல் போல, சிவபெருமான் உயிர்த்தொடர்பினாலே எப்பொழுதும்

இம்மூவகையருஞ் சேர்ந்த ஒரு துணைவனுயிருக்கின்றான் என்பது குறிப்பிடப்பட்டது. சிவபெருமான் அன்பினாலே உயிர்களுடன் ஒன்றாய்க் கலந்திருத்தலை 'ஈன்றாள்' எனவும், அறிவினாலே உயிர்களுக்கு வேறாய் நின்று அறிவித்தலை 'எந்தை' எனவும், செயலால் உயிர்களுக்கு உடனாய் நின்று விடயங்களிற் செலுத்துதலை 'உடன்றோன்றினார்' எனவும் அடிகள் சிவபெருமானுக்கும் உயிர்களுக்கு முள்ள அத்துவிதத் தொடர்பைக் குறிப்பிட்டார்.

இருந்து என்ற வினையெச்சம் இருக்க எனத் திரிந்தது.

தோன்றாத் துணையாய் இருந்தனன் தன் அடியோங்களுக்கே—சிவபெருமான் எப்பொழுதும் உயிர்களோடு கலந்திருத்தலினாலே அடிகள் (புதிதாகத்) 'தோன்றாத்துணை' என்றார். அவ்வாறு அவன் எல்லா உயிர்களுடன் கலந்திருந்தாலும் மலம் நீங்கப் பெற்ற அடியார்களுடைய உள்ளத்தில் மட்டும் பேரொளியாய் விளங்கி ஏனையோருடைய மலம் பொதிந்த உள்ளத்தில் விளங்காதிருத்தலின் அடிகள் 'தன்னடியோங்களுக்கே தோன்றாத் துணை' என்றார். தோன்றாத் துணை என்ற சொற்றொடருக்கு இக்கருத்துக்கள் அமைந்திருத்தலுடன் திருப்பாதிரிப்புலியூர்த்தலச் சிவபெருமானுடைய பெயராகவு மிருக்கிறது (தோன்றாத் துணையீசர்).

அடியோங்களுக்கே என்பதிலுள்ள ஏகாரம் பிரிநிலைப் பொருளில் வந்தது. அடியோம் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைக் குறிப்பு வினையாலணையும் பெயர். அதனுடன் கள் விகுதிமேல் விகுதி, அடியார்களாகிய எங்களுக்கு என்பது பொருள்;

அடிகள் முதல் மூன்று அடிகளிலும் தமது அனுபவத்தையும், நான்காவது அடியில் அடியார்கள் எல்லார்க்கும் உண்டாகும் அனுபவத்தையுங் கூறுகின்றார்.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# தமிழ் அறிவியற் சொற்கள்

## Geometry - வடிவளவை

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் B.E.]

(௲௫௭௰ம் பக்கத் தொடர்ச்சி)

Case என்பது cadere என்ற சொல்லினின்றும் பிறந்ததாகும். Cadere என்ற சொல்லிற்கு, விழுவது என்பது பொருள். ஆனால் கணக்களவையில் அஃது ஏதோ ஒன்றிலிருந்து எதிர்பாராத வகையில் உண்டாவது அல்லது விழுவது என்று பொருள்படாது;

குறித்த ஒன்றிலிருந்து திட்டமாகப் பெறப்படுவது என்று பொருள் படும். எனவே நேர்(தல்) என்ற தமிழ்ச் சொல்லை நேர் பொருளாகக் கொள்ளுதல் ஏற்றதன்று; ஏனெனில் அதன்கண் எதிர்பாராமல் நேர்தல் என்னும் பொருள் உட்பொதிந்து கிடத்தலால். உறுதல் என்ற சொல்லில் திட்டமாக நேர்தல் என்னும் பொருள் பெறக்கிடக்கின்றது. ஆயினும் உற்றது, உறுவது என்று வினைமுதற் சொல்லாகப் பொருள் கொளின் அவை பெரும்பாலும் காலங் குறித்து நிற்கின்றவையாகப் பிறழ்ந்து கருதப்படுமாகலின் அவை சொல்லாக்கத்திற்குப் பயன் படுமாறில்லை. சீவல் (பாக்குச் சீவல்) வறுவல் (நெருப்பின்மீது வைத்துச் சூடேற்றல் அல்லது பொரித்தல்) திருவல் (தேங்காய்த் திருவல்) துவையல் (பருப்புத் துவையல்) கழுவல் (அம்மி, குடைகல் முதலியவற்றைக் கழுவி யூற்றல்) என்ற சொற்கள் சீவு, வறு, திருகு, துவை, கழுவு என்ற வினையின் பயன்களைக் குறித்து நிற்பதற் கறிகுறியாக அல் விகுதி ஏற்று நிற்கின்றன. அஃதேபோல் உறுவல் என்று பொருள் கொண்டால் *case* என்னுஞ் சொற்குரிய வடிவளவைச் சிறப்பு நன்கு விளங்குவதாகும்.

| | | |
|---|---|---|
| *Case* | ... | உறுவல் |
| Case of Theorem | ... | தேர்வின் உறுவல் |
| Particular case of Theorem | ... | தேர்வின் சிறப்புறுவல் |
| *Diagonal Scale* | ... | சார்வரை யளப்பன் |
| *Practice* | ... | பயிலல், பயில்பு, பயிற்சி |
| *Practical* | ... | பயிலியல் |
| Practical Geometry | ... | பயிலியல் வடிவளவை |
| *Edge* | ... | ஓரம் |

"Straight edge" என்பது உலோகத்தினலாய நேர் ஓரங்களுடைய தட்டையான ஒரு கருவியைக் குறிக்கும். எனவே அதற்கு "நேர் ஓரம்" என்றே நேர்பொருள் கோடல் சாலாது; எப்பொருளின் நேர் ஓரங்களையும் அஃது குறிக்குமாதலின். நந்நாட்டுத் தச்சர்கள் "வருவுசட்டம்" என்று நேர்கோடிழுப்பதற்காக ஒரு கருவியை வைத்துக்கொண்டிருக்கின்றனர். தாள் செய்யக் கண்டு பிடிப்பதற்கு முன்பே கையாளப்பட்டுப் பெயர் சூட்டப் பெற்றிருந்த "வருவுசட்டம்" என்பதே விழுமிய பொருளாகும்.

*Straight edge* } ... வருவு சட்டம்
Flat Ruler } ...
*Ruling* ... வருவுதல்
*Rule* ... வரை
*Ruler* ... வருவி
*Round Ruler* ... வருவுருளை

*Prallel Ruler* என்பது ஒரு போகுவரைகள் வருவுதற்காக உருளைகளோடு கூடியதாய் இயற்றப்படும் வருவுசட்ட மாகும். எனவே அது ஒருபோகு வருவி எனப் பொருள்படும்.

*Graduation* ... பகிர்ப்பு
*Graduated* ... பகிர்ந்த, பகிர்
Graduated Edge ... பகிர் ஓரம்
Graduated Scale ... பகிர் அளப்பன்
Decimal Graduation ... பதின் பகிர்ப்பு
Deodecimal Graduation ... பன்னீரன் பகிர்ப்பு
Vernier Scale ... வெரினியரளப்பன்
Sliding Scale ... சருகளப்பன்
Slide Rule ... சருகலகு
*Micrometer* ... அணுமட்டு
Lineal micrometer ... நெட்டணுமட்டு
Angular micrometer ... முடக்கணுமட்டு.

Microscope என்பது "நுண்ணிய" என்று பொருள்படும் Mikros என்னும் சொல்லும், "நோக்க" என்று பொருள்படும் Skopein என்னும் சொல்லும் சேர்ந்து உண்டானதாகும். அது கட்புலனுக்குத் தெரியாத நுண்ணிய பொருள்களையும் பன்மடங்கு பெரிதாக்கிக் கட்புலனுக்குத் தெரியுமாறு காட்டும் ஒரு கண்ணுடிக் கருவியாகும். Magnifier அல்லது Magnifying Glass என்ற பூதக் கண்ணுடியும் பெரிதாக்கிக் காட்டும் ஆற்றல் படைத்த தேனும் அதற்கும் Microscope என்பதற்கும் உள்ள வேற்றுமை என்னவெனில் முன்னது கட்புலனுக்குத் தெரியும் பொருள்களை மட்டும் பெரிதாக்குமேயன்றிப் பின்னதைப்போல் கட்புலனுக்குத் தெரியாத மிக நுண்ணிய பொருள்களையும் பெரிதாக்கித் தெரியுமாறு காட்டாது என்பதே. அணுப்பெருக்கங்காட்டி என்று அதைத் தமிழில் கொள்ளலாம்

*Microscope* ... அணுப்பெருக்கங்காட்டி
*Magnifying Glass* ... பருக்கங்காட்டி.

Micrograph என்ற சொல் Mikros என்ற சொல்லும், எழுது என்று பொருள்படும் Graphein என்ற சொல்லும் சேர்ந்து பிறந்ததாதலின் அதற்கு அணுவெழுதி என்று நேர் பொருள் கொள்ளலாமோ வெனின், கொள்ளக்கூடாது. Micrometer, Microscope என்ற சொற்களிலுள்ள Mikros என்பது நோக்கப்படும் பொருளின் நுண்மையைக் குறிக்கும்; ஆனல் Micrograph என்பதிலுள்ள Mikros என்பதோ Micrograph என்னுங் கருவியாலுண்டாக்கப்படும் பொருளின் நுண்மையைக் குறிக்கும். எனவே இங்கே அணு என்ற தமிழ்ச் சொல் பயன் படாதது எளிதிற் புலனும். நுணுகு என்ற மற்றொரு சொல்லின் உதவிகொண்டு நுணுக்கெழுது கருவி என்று சொல்லாக்கிக் கோடல் கோரிய பொருளைத் தருவதாகும்.

*Micrograph* ... நுணுக்கெழுதுகருவி

Microphone என்பதும் அவ்வாறே அணுவொலி என்று பொருள் படாது அணுவொலி பெருக்கி அல்லது அணுவொலி பெருக்கு கருவி என்றே பொருள்படும்.

*Microphone* ... அணுவொலிபெருக்கி.

Pantograph என்பது எல்லாம் என்று பொருள்படும் Pan, எழுது என்று பொருள்படும் Graphein, ஆகிய இருசொற்களின் சேர்க்கையாற்பிறந்ததாகும். அதற்கு எல்லாமெழுது கருவி என்று நேர்பொருள் கொள்ளுதல் அமையாது. ஏனெனில் வரையப்பட்ட ஒரு வடிவைப் பெருக்கியோ குறுக்கியோ வேண்டிய அளவிற்கு வேண்டியவாறு படி எடுக்குங் கருவியே Panthograph அல்லது Pantograph என்பதாகுமாதலின்: எனவே படிவரை கருவி அல்லது படிவரைவன் என்று தமிழ்ச் சொற் கோடல் சிறிதாம்.

*Pantograph* ... படி வரைவன்
*Semicircular Protractor*... அரைவட்ட முடக்களப்பான்
*Clinometer* ... வளைவுமட்டு, வளைவளப்பன்

Plumb என்பது ஆங்கிலத்தில் "ஈயம்" என்று பொருள் படினும் செங்குத்து என்ற பொருளையே குறிக்கும். எனவே

செங்குத்து அல்லது நெட்டுக்குத்து என்று பொருள் கொள்ள லாம்.

Plumb line ... தூக்குக் குண்டு.

இப்பொருளில் ஈயக்கட்டியேயன்றி கனமுள்ள ஒவ்வொன் றையுங் கட்டித் தூக்கிக் கோடல் எளிதாதலும், இச்சொல் இற் றைக்கும் கொத்தர்களால் வழங்கப்படுவ தொன்றுதலும் கூர்ந்து உளங்கொளற் பாற்று.

Spirit என்பது நிலையற்று ஓடும் நீர்ப்பண்புபடைத்த பொரு ளைக் குறிக்கும். Spirit level என்பது மட்டம் பார்க்குங் கருவி நீர்மட்டப்பலகை அல்லது நீர்மட்டம் என்ற பெயருடன் நந்நாட் டில் அக்கருவி வழங்கப்பட்டு வருகிறது. மட்டம் பார்ப்பதற்கு Spirit என்ற இரசமேயன்றி நீர்மைக்குணம் அமைந்த எப்பொரு ளும் சாலுமாகலின் நீர் மட்டத்திலுள்ள நீர் என்பது இரசத்தைக் குறிக்கவேண்டிய கட்டாயமில்லை. இரசமட்டம் என்று பொருள் படும் Spirit level என்பதை ஆங்கிலேயர் விடாப்பிடியாகப் பொருளின்றிப் பற்றிக் கொள்ளின் கொள்ளட்டும். நீர்மட்டம் என்ற தமிழ்ச்சொல்லே குறித்த கருவிக்கு ஏற்ற பெயராகும்.

*Spirit level* ... நீர்மட்டம்
*Fluidity* ... நீர்மை

மேனாட்டில் சிலபொருள்களை எரித்து, எரிக்கப்பட்ட அக்கரி யுடன் தண்ணீர் அல்லது வேறு நீர்ப்பொருளைச் சேர்த்து எழுது வதற்கு மை செய்து வந்தார்கள். இதைக் குறிக்கவே "உள் ளெரியும்" என்று பொருள்படும் Engkaiein என்ற சொல்லி லிருந்து Ink என்ற சொல் ஆங்கிலத்தில் உண்டு செய்யப்பட்ட தாகும். கருமையையே குறித்து நின்ற இச்சொல் இப்பொழுது பொதுச் சொல்லாகி எழுதுவதற்குப் பயன்படும் நீர்ப்பொருளை உணர்த்தி நிற்கின்றது. சிவப்பு இங்கி என்றும், நீல இங்கி என் றும் பச்சை இங்கி என்றும் ஆங்கிலத்தில் வழங்கும் சொற்களை நோக்குக.

தமிழிலோ எழுதப்பயன்படும் நீர்ப்பொருளுக்கு மை என்று பெயர் வழங்குகிறது. இஃது அறிவியலுக்கு எவ்வகையிலும் ஓம்ப உண்டானதோர் சொல்லாகும். மை என்பதற்கு பொடித் தல் என்பது வேர்ப் பொருள். "அரிசி மைத்தது" என்

பது வழக்காறு. "மைய அரை" என்பதும் நோக்குக. "அவள் மையலானுள்" என்றால் அவள் காதல் கொண்டாள் என்று பொருள் படுவது எவ்வாறெனில், அவளுடைய மனம் மைத்து இளகி நின்று அவனைக் காதல் கொள்ளச் செய்தது என்ற செயலையே குறிக்குமாகலின். பொடித்தல் என்றதைக் குறிக்கும் மை என்ற இச்சொல் கல்வியறிவில்லாத தமிழ் நன்மக்கள்பால் இன்றும் "இங்கி"யைக் குறிக்க வழங்குகிறது. அச்சொல்லுக்குள்ள அறிவியற் பண்பு தெரிந்தால் அவர்கள் அங்காப்பர்! எனவே

| | | |
|---|---|---|
| *Ink* | ... | என்பது மை எனப்பாற்று |
| *Ink bottle* | ... | மைக்கூடு |
| *Black Ink* | ... | கருமை அல்லது மை |
| *Red Ink* | ... | செம்மை அல்லது சிவப்பு மை. |

பிறவுமின்ன.

காழி. சிவ. கண்ணுசாமி.

(தொடரும்)

---

## ஆந்திர நாட்டில்

# தமிழ்க் கல்வெட்டுகள்

(திரு. C. M. இராமச்சந்திர செட்டியாரவர்கள், B.A., B.L.)

ஆந்திர நாட்டில் கோதாவரி ஜில்லாவில் இராமச்சந்திரபுரம் தாலூக்காவில் திராக்ஷாராமம் என்ற ஒரு புண்ணிய க்ஷேத்திரம் இருக்கின்றது. இஃது ஒரு பண்டைக் காலத்தலம். இத்தலத்து மூர்த்தியின் பெயர் ஸ்ரீ பீமேசுவரர். இவ்வூர் ஆலயத்தில் 381 கல்வெட்டுகள் உள்ளன. அவைகள் தெலுங்கு பாஷையில் எழுதப்பெற்றிருக்கின்றன. ஆனால் அவைகளில் 12 தமிழ்ப் பாஷையில் உள்ளன. தமிழில் உள்ளவைகளிலும் 5 செய்யுள் வடிவில் உள்ளன. இவைகளைப் பார்க்க நம் தமிழ் மக்கள் ஆச்சரியப்படுவார்கள். ஆகவே அவைகளை எடுத்து எழுதலாம் என்று எண்ணினேன்.

நம் தமிழ் நாட்டில் சோழர் ஆதிக்கம் பெருகின பிறகே அவ்வரசர்கள் பிற நாடுகளுக்குத் தண்டெடுத்துச் சென்றனர். முதல் முதலில் இராசராசச்சோழன் வடக்கும் வடமேற்கும் சென்றான்.

அவன் மகன் இராசேந்திரச் சோழன் வடக்கே கங்கைக்கரை மட்டும் சென்றான். அப்போது தெலுங்கு மன்னர்களுடன் சோழர்கள் உறவும் கொண்டார்கள். இராசேந்திரனுடைய மகள் தெலுங்கு அரசனை மணம் புரிந்து அவள் வயிற்றில் உதித்த இராசேந்திரன் இரண்டாவதவன் தெலுங்கு நாட்டில் அரசு புரிந்துவந்தான். அங்கே உள்ள சோழர்களின் கல்வெட்டுகளில் சோழர் என்ற பதத்தை "சோடர்" என்று குறித்துள்ளார்கள். தஞ்சையில் ஆண்ட வம்சம் சந்ததியற்றுப்போக வடக்கே இருந்த பெண் வயிற்றுப் பிள்ளையான இராசேந்திரன் II சோழ அரசிற்கு உரிமை கொண்டாடித் தஞ்சைக்கு வந்து சிங்காதனம் ஏறினான். அவ்விதம் பட்டத்திற்கு வந்தவுடன் தன் பெயரைக் குலோத்துங்கன் என்று மாற்றிக்கொண்டான். இவன் தான் கி. பி. 1073 முதல் 1118 வரை ஆண்ட குலோத்துங்கன் I என்பவன். இவன் வெகு பிரக்கியாதியுடன் ஆண்டு, பல போர்கள் செய்து நாடுகளைக் கைப்பற்றினான். அவைகளில் ஒன்று கலிங்கத்துப் போர். வடக்கே கலிங்க நாட்டில் அரசன் திறை கொடாததினால் அவன் மீது படையெடுத்து வெல்லும்படி தன் படைத்தலைவனான கருணாகரத் தொண்டைமானை அனுப்பினான். அந்தளகர்த்தனும் தன் அரசனுக்காகப் போர்புரிந்து எதிரியின் நாட்டை அழித்துவிட்டு வெற்றியுடன் திரும்பினான்.

இந்தப் போரினைத்தான் செயங்கொண்டார் தம் அரிய நூலாகிய கலிங்கத்துப் பரணியில் நிலைநிறுத்தி இருக்கின்றார். இப்போரினைக் குறித்துக் குலோத்துங்கனுடைய கல்வெட்டுகளிலும் காணலாம். கலிங்கத்துப் போருக்குப் பிறகு ஆந்திர நாடு முழுதும் அவன் கைக்குள் அடங்கிவிட்டது. அக்காலத்தில் ஆந்திர நாட்டில் ஏற்பட்ட சகல சாசனங்களும் இவ்வரசன் பெயராலேயே எழுதப் பெற்றிருக்கின்றன. இவ்வரசனும் பல ஆலயங்களுக்குத் தானங்கள் புரிந்திருக்கின்றான். முக்கியமாக எல்லாக் கல்வெட்டுகளும் தெலுங்கிலேயே இருக்கின்றன. அரசன் தெலுங்கு மன்னனுடைய புதல்வனாகையாலே தெலுங்கும், தமிழ் அரசியின் மகனாகையினாலே தமிழும் அறிந்திருப்பான். இளவயது முழுதும் தெலுங்கு நாட்டில் கழித்ததினாலே தெலுங்கில் பிரியம் இருந்து தன் சாசனங்களைத் தெலுங்கில் பதிப்பித்திருக்கலாம். தெலுங்கு நாட்டார் அறியும் பொருட்டும் தெலுங்கில் பதிப்பித்ததும் ஒரு காரணம்

ஆகும். பிற்காலம் தமிழ் நாட்டிலேயே தலைநகர்கொண்டு தமிழ ருடனே பழகி வந்ததினாலே தமிழ்க் கல்வெட்டுகளை வடக்கேயும் புகுத்தி இருக்கலாம். ஆகவேதான் தமிழ்க் கல்வெட்டுகள் சில வற்றை அங்கே காண்கிறோம்.

தெலுங்குக் கல்வெட்டுகளில் இவன் பெயரை "விஷ்ணுவர்த் தனன் குலோத்துங்கச் சோடதேவர்" என்று எழுதியிருக்கிறார் கள். இவனுக்கு "விஷ்ணு வர்த்தனன்" என்ற பெயர் எப்படி வந்தது என்பது ஆராயத்தக்க தொரு குறிப்பு ஆகும். சோழர்கள் எல்லாரும் சிவ பக்தர்கள். இராமாநுசரை குரூரமாக நடத்திய சோழன் இவன் என்று குறிப்பாரும் உண்டு. அப்படியாயின் விஷ்ணு வர்த்தனன் என்ற பெயர் வருமா? தெலுங்குக் கல் வெட்டுகளில் விஷ்ணு வர்த்தனன் என்று பெயர் சொல்லி இருக் கிறபடியினாலே இவன் விஷ்ணு பக்தனாகவும் அல்லது சமரசம் கொள்கை உடையவனுமாகவும் இருந்திருக்க வேண்டும். ஆகவே இராமாநுசரைக் கண்டித்தவன் இவனாக இருக்க முடியாது.

தமிழ்க் கல்வெட்டுகளைப் பார்த்தால், தெலுங்கு நாட்டிலும் சோழ அரசர்கள் தம் வழக்கப்படி நாட்டுப் பிரிவுகளுக்குத் தமிழ்ப் பெயர்களைக் கொடுத்தார்கள் என்றும், தளகர்த்தர் களாகத் தமிழர்களை நியமித்தார்கள் என்றும் தெரியவரும். அவ் விதம் சென்ற தமிழ்த் தளகர்த்தர்களும் பிரபுக்களும் தமிழிலேயே கல்வெட்டுகளைப் பதிப்பித்திருக்கலாம். அவ்விதம் பதிப்பிக்கப் பட்ட சிலவற்றைத் தாம் தெலுங்கு நாட்டில் ஆங்காங்கே காண் கின்றோம். அவைகளிலே செய்யுள் நடையைக் காண்பது தான் மிகவும் வியப்பைத் தருகின்றது. நடையும் நன்றாக இருத்தலால் அவைகளை இங்கே எழுதுவோம்.

I

புகழ்மாது விளங்க ஜயமாது விரும்ப
நிலமகள் நிலவ மலர்மகள் புணர
உரிமையில் சிறந்த மணிமுடி சூடி
மீனவர் நிலைகெட வில்லவர் குலைதர
ஏனை மன்னவர் இரியலுற் றிழிதரத்
திக்க னைத்துந்தன் சக்கர நடாத்தி
வீர சிங்கா சனத்து
அவனி முழுதுடை யாளொடும்

வீற்றி ருந்த ருளிய கோவிர.........................
கேசரிபன்ம ரான
ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு......................
யாண்டு நாற்பதாவது
இடர்க்க ரம்பையில்............
..................................
..................................
..................................
பிள்ளையார் ஸ்ரீ பராந்தக தேவர்
மாளிகை நாயகம் பாண்டி குலாசனி
வளநாட்டு எயியூர் நாட்டுச்
சிற்றூயில் வட்டத்துச் சிற்றூயில்
உடையான் அருளாக்கி நலனுன
கிடாரங் கொண்ட சோழத்
தென்கரை நாட்டு மூவேந்த வேளான்

—176 of 1893.

## II

இம்பர் நிகழவிளக் கிட்டான் இடர்க்காம்பைச்
செம்பொனணி வீமிச்சரந் தன்னில்—உம்பர்தொழ
விண்ணுய்ய நின்ருடு வானுக்கு வேலைசூழ்
மண்ணுய்ப நின்ருடு வான்.

—199/1893.

இச் சாசனத்தின் முதற்பாகம் தெலுங்கில் உள்ளது.

## III

திருமருவிய திருப்புயத்துத்
திறல்வளவன் திகழ்ந்திலங்கிய
திருப்பெருங் குட்டை
உலகு மன்னவன் உறந்தை காவலன்
மறங்கிளர் வெற்போர்க் களிற்றுப்
புகழபையன்......செம்பியற்கு
நாற்பதின் மேலிரண்டுடன் நாலாண்டு
...............
இடர்க் காம்பையில் திங்கள் தங்கு

கடவுள்.....................
நிமித்த மாத வினைவயலின் விளங்கு
..................................

—200/1893.

IV

புயல்மேவு பொழிற் றஞ்சை முதல்பஞ்ச
நதிவாணன் புதல்வன் பூண்ட
வயல்மேவு களியானை முடி கொண்டான்
—ம நெடுவேல் வத்தார் வேந்தன்
இயல்மேவு தோளபயற் கிருபத்தை
யாண்டில் இடர் காம்பைச்
செயல்மேவு மீசர்க்குத் திருநந்தா
விளக் கொன்று திருத்தினனே.

—416/1893.

V

ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு
யாண்டு நாற்பத் தாவது
திருவிந்தளூர் நாட்டுக் கஞ்சாதன்
பஞ்சநதி முடி கொண்டானான
வத்த ராயன் மாதா பிதாக்களைச்
சாத்தி இடர்க் காம்பை மூல
ஸ்ரீ வீமநாத வுடையார்க்கு
நந்தா விளக் கொன்று......

—417/1893.

முதல் கல்வெட்டு குலோத்துங்கன் 1 உடைய மெய்க்கீர்த்தி; அகவற்பாவால் ஆக்கப் பெற்றது. அதில் பிற்பாகம் உரைநடை. அவனிமுழுதுடையாள் குலோத்துங்கனின் பட்டமகிஷி. இடர்க் காம்பை என்பது திராக்ஷாராமம் என்ற ஊரினுடைய தமிழ்ப் பெயர். இக் கல்வெட்டு குலோத்துங்கனுடைய 40-ஆண்டு அதாவது கி.பி. 1113-ல் ஏற்பட்டது. தானம் செய்தவன் அரசியல்

மேலே காட்டிய கல்வெட்டுகளில் முதல் நான்கும் செய்யுள்கள். 5-வது உரைநடை. அது நான்காம் செய்யுளை விளக்குகின்றதால் இங்கு வெளியிடப்பட்டது.

உத்தியோகத்தனான மூவேந்த வேளான் என்பவன். அவனது அடைமொழிகள் ஊர் முதலியன அதில் குறிக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது ஒரு அழகிய வெண்பா. ஊர்-இடர்க்கரம்பை, ஈசன் திருநாமம் வீமீசுரம். மண்ணுய்ய நின்றருடுவான் என்ற பிரயோகம் கவனிக்கத் தக்கது.

மூன்றாவது செய்யுள் பூர்த்தியாகக் கிடைக்கவில்லை, உறந்தை காவலன், புகழ் அபயன், செம்பியன் என்ற பெயர்களும் 46-ம் ஆண்டு என்பதும் காணில் இது கி. பி. 1119-ஆண்டில் ஏற்பட்டது ஆகும் எனலாம்.

நான்காவது அறுசீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தம். 5-ம் கல்வெட்டு அதனை விளக்குகின்றது. கஞ்சநாதன் அல்லது தஞ்சை நாதன் புதல்வனான முடிகொண்டான் என்ற வத்தராயன் என்போன் அபயன் என்ற குலோத்துங்கனுடைய 25-ஆண்டு அதாவது கி. பி. 1098-ல் நந்தா விளக்கிட்டதை அது குறிக்கின்றது. செய்யுள் நடை நீரோட்டமாக விளங்குவதைக் காணலாம். இவைகள் தெலுங்கு நாட்டில் தமிழர்கட்கிருந்த செல்வாக்கை எடுத்துக் காட்டுகின்றன. 11-ம் நூற்றாண்டில், தமிழ்ச் செய்யுள் நடை எவ்வாறிருந்தது என்பதும் அதன் கீர்த்தி தெலுங்கு நாட்டிலும் பரவி விளங்கிற்று என்பதும் இவைகளினால் அறியக்கூடும்.

---

# மூர்த்திநாயனார்

(பண்டிட் A. நடராஜபிள்ளை அவர்கள்)

---

[முன் ௩௧௭-ம் பக்கத் தொடர்ச்சி]

நான்காங் கூறு

## திருத்தொண்டுக்குச் செய்த தீங்கு

அமணர்கள் முற்கண்ட வண்ணம் முடிவு செய்த நாளிற்கு மறுநாள் பொழுது புலர்ந்தது. மூர்த்தி நாயனார் வழக்கம் போல், வைகறை வேளையில் எழுந்து காலைக்கடன்களை முடித்தார். திருவாலவாயின் திருக் கோபுரக் காட்சி அவரால் கண்டு வணங்

கப்பட்டது. அவர் ஆடிவீதியை விட்டகன்று, மதுரைமாநகரத் தெருக்களின் வழியே சென்றார். அவருக்கு அன்று இடத் தோளும் இடக் கண்ணும் துடித்தன. நெஞ்சமோ யாதும் தோன்றப் பெறாது திகைத்தது. மதுரைத் தெருக்களில், இவர் அரிவாளொடு சந்தனக்கட்டை வெட்டச் செல்வதைக் கண்ட அமணர்கள் கூட்டமாகக் கூடி நின்று தமக்குள் பலவாறு பேசிக் கொண்டனர். அரசாங்க ஏவலாளரில் இருவர் நாயனாரைப் பின் பற்றி நடந்து, அவரது நிழல்போல் தொடர்ந்தனர். நிகழப் போவதை நினைக்கவியலாத மூர்த்திநாயனார் பாண்டி நாடெங்கும் அமணர்கள் நிரம்பி யிருப்பதையும், தம்பால் முன்பு அன்பு செலுத்திக் கொண்டாடிய பாண்டி மக்களிற் பலரும் அமண் குழியில் அகப்பட்டுழல்வதையும் நினைத்து வருந்தியபடியே நகரைக் கடந்து, சந்தனக் காட்டிற்குள் நுழையத் தொடங்கினார்.

அவ்வளவில், அவர்பின் தொடர்ந்து வந்த ஏவலாளரில் ஒருவன் அவரைச் சந்தனக் காட்டிற்குள் புகவிடாது தடுத்து, அரசனது கட்டளைச் சீட்டொன்றைக் கொடுத்தான். மூர்த்தி நாயனார் அரசனது கட்டளையை மீறி நடத்தல் பலவிதமான உள் நாட்டுக் கிளர்ச்சிகளுக்கு இடமாய்ப் பலவுயிர்களுக்கும் கேடு பயக்கக் கூடியதா மெனக் கருதியவராய்த் திருவாலவாயினை நோக்கித் திரும்பினார். எம்பெருமானுக்கு நடக்கவேண்டிய சந்தனக் காப்புப் பணிவிடையை அன்றுமுதல் நிறுத்த நேர்ந்தமைகருதி அவர் நெஞ்சம் பட்டபாடு கொஞ்சம்நஞ்சமல்ல. எப்பொழுது அமணாட்சி மாறி ஐயனாட்சி உண்டாகுமோ என அவர் நெஞ்சங் கவலை கொண்டது. இவர் வெறுங்கையோடு திரும்புகையைக் கண்ட அமணர்களிற் சிலர் கைகொட்டி யார்த்தனர். உடனே மூர்த்திநாயனார் நெஞ்சம் பெருங் குழப்பத்தில் ஆழ்ந்தது. பித்துக்கொண்டவர் போன்று மதுரைத் தெருக்கள் பலவற்றிலும் அவர் அன்று பகல் முழுவதும் சுற்றித் திரிந்தார்; தமக்குத் தாமே பேசிக் கொண்டார். அவர் கண்களிலிருந்து கண்ணீர் மாலை மாலையாக வழிந்தோடியது. கண்கள் அடிக்கடி வெட்ட வெளியை உற்று நோக்கின. இவர் நிலையினைக் கண்ட மதுரைமாநகர மக்களிற் பலர் பெரிதும் இரக்கங் கொண்டு, அமணாட்சியை உள்ளில்

வெறுக்கலாயினர். சமண சமயத்தைப் பரப்புதலில் மட்டுங் கருத்து மிக்க சில அமணர்கள் இவ்வடியவர் நிலையைக் கண்டு அக மகிழ்ந்தனர்.

இங்ஙனம் பகற்போது கழிய இராக்காலம் நெருங்கியது. மூர்த்திநாயனரும் தமது நெஞ்சக் குழப்பஞ் சிறிது நீங்கப் பெற்ற வராய்த் திருவாலவாயை அடைந்து சொக்கலிங்கப் பெருமானுக்குச் சந்தனக்காப்பு அணியப் பெறுமையைக் கண்டார். அவர் நெஞ்சம் மீண்டும் புழுங்கியது. அன்று எம்பெருமான் திருப்பணியை மேற்கொள்ளாது வீணே காலங் கழித்த அவரது இரண்டு கை களும் அவருடைய கண்களுக்குப் புலப்பட்டன. அக்கண்கள் அவைகளைப் பார்க்கப் பெரிதுங் கூச்சமடைந்தன. "சந்தனக் காப் புக்கு முட்டுப்பாடு உண்டாக்கியவன் அரசன். எம்பெருமான் திருப்பணிக்கு முட்டுப்பாடு உண்டாக்கியவன் யாவன்? அவன் யானல்லனே? என் கைகள் இரண்டும் எவ்விதக் குறைகளுமின்றிச் செவ்வனே இருக்க, எம்பெருமான் திருப்பணியை நான் எவ் விதமேனும் செய்யாதிருப்பது என் குற்றமே யன்றோ?" என்று அவர் தம்மைத் தாமே வினவிக்கொண்டு திருப்பணி நடக்கும் இடத்தை நோக்கி விரைந்து நடந்தார். அங்கிருந்த சந்தனக்கல்லில் அவருடைய முழங்கைகள் இரண்டும் வைக்கப்பெற்று அவரால் தேய்க்கப்பட்டன. முழங்கைகளிலிருந்து உதிரம் வெளிப்பட்டுச் சந்தனக் கல்லில் நிறைந்தது. எலும்புகள் தேய்ந்தன. அவற்றி னின்றும் மூளைகள் புறப்பட்டுக் குருதியுடன் கலந்து செஞ்சாந்து போல் தெளிந்தன.

இந்நிலையினைக் கண்ட சொக்கலிங்கப் பெருமான் திருவுள மிரங்கியவராய், "ஏ! அன்ப! சிறிது அமைக! அன்பின் மிகுதி யால் நீ இங்ஙனம் திருப்பணி செய்யத் துணிந்தது அடாது. நீ இவ்விதம் வீணுக்கும் எலும்பும், இரத்தமும், தோலும், மூளையும் எம்மால் கொடுக்கப்பட்டனவன்றோ? இவற்றை நீ எமது அறு மதியின்றி இவ்வண்ணஞ்செய்யத் தொடங்கியது குற்றமாம். அன் புடன் செய்தமையால் இக்குற்றத்தைப் பொறுத்தோம்," என்று விண்ணொலியாற் கூறினர். மூர்த்தி நாயனர் இவ்வொலி கேட்டு வியந்து விண்ணினை நோக்கினர். மீண்டும், "ஏ! அன்பு மூர்த்தியே! உனது திருத்தொண்டுக்குத் தீங்கு செய்த அமணுட்சி இன்றிரவிற்

குள் அழிந்துவிடும். இப் பாண்டி நாட்டினை நாளைமுதல் நீயே கைக்கொண்டு ஆண்டு, சமண சமயத்தை விலக்கிச் சைவ சமயத்தைத் தழைத்தோங்கச் செய்வாயாக !" என்று ஆகாயவாக்குக் கூறிற்று.

உடனே மூர்த்திநாயனார்க்கு மெய்ம்மயிர் பொடித்துப் புளகமுண்டாகியது. மழை கண்ட பயிர் போல் முகம் மலர்ந்தது. மூன் தேய்ப்புண்ட புண்கள் மாறப் பெற்று முழங்கைகள் முன்போலாயின. கால்களும் கைகளும் களிப்பு மிகுதியால் துள்ளிக் குதித்து, நாற்புறமும் வீசிக் கூத்தாடின. அவர் எம்பெருமான் திருமுன்பு சென்று பாடி யாடி அன்றிரவைக் கழிப்பாராயினர்.

இது நிற்க, அன்றிரவின் தொடக்கத்திலேயே மிகவும் அச்சத்தை யுண்டாக்கக் கூடிய வால் வெள்ளி ஒன்று கீழ்பால் தோன்றியது. அதனைக் கண்ட பாண்டிமக்கள் மிகவும் பயங் கொண்டனர். மூர்த்தி நாயனாருடைய திருத்தொண்டுக்குச் செய்த தீங்கே இவ்விதம் முளைத்தது என நகரமக்கள் அனைவரும் நடுங்கினர். அரண்மனையில் அடைபட்டுக் கிடந்த அமண அரசனும் வால் வெள்ளியை நோக்கிப் பெரிதும் திடுக்கிட்டான்.

குடிமக்கள் பலரும் ஒருவர்பின் ஒருவராய் அரசன் முன் சென்று, அவ் வால் வெள்ளியால் அரசுக் குண்டாகும் தீங்குகளையும், அமைச்சர்கள் நடத்திய கொடுமைகளையும் விரித்துக் கூறலாயினர். கருநாடகத்தி லிருந்து அரசனைத் தொடர்ந்து வந்திருந்த அமண அமைச்சர்களும், அமணத்துறவிகளும் இவ் வால் வெள்ளியால் தங்களுக்கு யாது நிகழுமோ என அஞ்சித் தமது பரிவாரங்களுடன் தமது நாட்டை நோக்கி நடந்தனர். மற்ற அதிகாரிகள் அச்சத்தால் நடுக்க முற்று, தத்தம் மனைகளிற் பதுங்கினர்கள். வால் வெள்ளியாலும் பாண்டி மக்களின் மொழிகளாலும் பயமிக்க அமண மன்னன் அகங்கலங்கி உயிரை ஒழித்தான்.

(தொடரும்)

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்

(திரு. மா. வே. நெல்லையப்பபிள்ளை அவர்கள் B.A.)

(திரு 21)

(முன் ௲அரு-ம் பக்கத் தொடர்ச்சி)

(6) ஸ்ரீ என்ற வடமொழிச் சொல்லுக்கு முதற்பொருள் செல்வம் (material wealth). பின் அது செல்வத்துக்கு அதிட்டான சத்தியாயிருக்கிற இலக்குமிக்கும் இலக்குமி உருவத்திலுள்ள அழகுக்கும் பெயர்களாய் வந்திருக்கிறது. திரு என்ற தமிழ்ச்சொல்லினது முதற்பொருள் அருள்; பின் அது பின்னே குறிப்பிட்டிருக்கிறபடி அருளை உடைய இறைவனுக்கும், அருட்சத்தியின் அம்சங்களாகிய பராசத்தி, திரோதானசத்தி, உமாதேவியார், இலக்குமி தேவியார், இலக்குமி தேவியாராற் கொடுக்கப்படுகின்ற செல்வப் பொருளுக்கும், இலக்குமி தேவியாருடைய உருவ அழகுக்கும் அருள்விளங்கும் பொலிவுக்கும், அருளாலடையப்படும் வீட்டு (முத்தி)க்கும், அருள் ஒழுக்கத்தாற் பெறப்படும் நன்மை அல்லது நல்வினைக்கும், சிறப்புக்கும் பெயர்களாய் வழங்கப்பட்டு வந்துள்ளது. ஸ்ரீ என்ற வடமொழிச்சொல்லுக்கு அருள் என்னும் பொருளில்லை. திரு என்ற தமிழ்ச்சொல்லினது பொருட்செறிவு ஸ்ரீ என்ற வடமொழிச்சொல்லுக்கு இல்லை. ஆதலின் திரு, ஸ்ரீயின் திரிபு என்று கூறுவது சிறிதும் பொருத்தமில்லை.

(7) ஏறக்குறைய நாலாயிரம் ஆண்டுகளுக்குமுன் பண்டைத் தமிழ்ப்புலவர்களால் வடமொழிச்சொற்கள் கலவாது பாடப்பெற்ற புறநானூறு 122 (வீயாத் திருவின்) 125 (திருத்தகு சேஎய்) 150 (வான்கதிர்த் திருமணி) 205 (முற்றியதிருவின்) 179 (திருவீழ்நுண் பூட்பாண்டியம்) செய்யுட்களில் திரு என்பது அருள் அழகு செல்வம் இலக்குமி என்ற பொருள்களில் வழங்கப்பட்டிருக்கின்றது. ஏறக்குறைய 1800 ஆண்டுகளுக்குமுன் பாடப்பெற்ற பத்துப்பாட்டு நூல்களிலும் திரு என்பது இலக்குமி செல்வம் அழகு என்ற பொருள்களில் வழங்கப்பட்டு வந்துள்ளது.

(8) திரு என்ற சொல்லைப்போல் தமிழ் மொழியில் பொருட்செறிவுடைய வேறொரு சொல் செம்மை என்பது. இந்த இரண்டு சொற்களும் சேர்ந்து "திருவளர் செம்மை" என்றும் "திருநின்ற

செம்மை" என்றும் தேவாரங்களில் வருதலை நாம் காண்கின்றோம். இந்த இரண்டு சொற்களும் முதற்பொருளாக வெவ்வேறு பொருள்களைக் குறித்தாலும் பின்வரும் பொருள்களாக [1] இறைவனையும் [2] வீட்டையும் (முத்தி) குறிக்கின்றன. செம்மை என்ற சொல்லும் திரு என்ற சொல்லைப்போல் புறநானூறு முதலிய தொன்னூல்களில் காணப்படுகின்றது. ஆதலின் செம்மை என்ற சொல் தமிழ் மொழிச்சொல் என்று சொல்லுதற்குச் சிறிதும் ஐயமில்லாதிருத்தல்போலத் திரு என்ற சொல்லும் தமிழ்மொழிச்சொல் லென்பதற்குச் சிறிதும் ஐயமின்று.

4. மேலே கூறப்பட்ட எட்டுக் காரணங்களாலும் 'திரு' என்ற சொல் ஸ்ரீ என்ற வடமொழிச்சொல்லினுடைய திரிபு அன்று என்பதும் தமிழ் மக்களால் பண்டைக்காலமுதல் வழங்கப்பட்ட தமிழ் மொழிச்சொல் என்பதும் தெளிவாய் விளங்கும்.

5. இனி, 'திரு' என்ற தமிழ்ச்சொல்லாற் குறிக்கப்படுகின்ற கருத்துக்களைப்பற்றி ஆராய்வாம். 'திரு' என்ற சொல்லுக்குப் பகுதியாயிருக்கிற அடிச்சொல் இன்னது என்பது விளங்கவில்லை. சமணப் புலவர்களால் இயற்றப்பெற்ற பிங்கல நிகண்டு சூடாமணி நிகண்டுகளில் திரு என்ற சொல்லுக்கு இலக்குமி, செல்வம் என்ற இரண்டு பொருள்களும், சூடாமணி நிகண்டில் அவ்விரண்டு பொருள்களுடன் சிறப்பு என்ற பெருளும் கூறப்பட்டிருக்கின்றன. திரு என்ற சொல்லினது பொருட்செறிவைச் சமய நூல்களின் துணைகொண்டு நாம் அறியவேண்டியதாயிருக்கிறது.

6. மேலே கூறியபடி திரு என்ற சொல்லினது முதற்பொருள் அருள் என்பது. அச்சொல் அருள் என்ற பொருளில் பன்னிரு திருமுறை நூல்களில் அளவில் பல இடங்களில்தான் வழங்கப்பட்டு வந்துள்ளது. அவற்றுள் சில இடங்களைமட்டும் இங்கே குறிப்பிடுகின்றேன்:—

---

1. "செம்மையாகு சிவன்" திருஞானசம்பந்தர் தேவாரம் (221-வது பதிகம் 9-வது செய்யுள் கழகப் பதிப்பு) செம்பொருள் = செம்மையாகிய பொருள், இறைவன்.

2. "செம்மையேயாய சிவபதமளித்த செல்வமே" திருவாசகம் பிடித்த பத்து, 3வது பாட்டு. "செம்மையாய சிவகதி சேரலாம்" திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் (154-வது பதிகம் 8-வது செய்யுள்) கழகப் பதிப்பு,

(1) "சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக் குன்றுடையானை" திருஞானசம்பந்த சுவாமிகள் திருச்சிராப்பள்ளித் தேவாரம், 1-வது பாட்டு.

(2) "திருவிற்பொலியுஞ் சத்திமுற்றத் துறையுஞ் சிவக்கொழுந்தே" திருநாவுக்கரசு - திருச்சத்திமுற்றம் திருவிருத்தம் 5-வது பாட்டு.

(3) "திருவுமெய்ப்பொருளுஞ் செல்வமுமுன் சீருடைக்கழல்களென்றெண்ணி" சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவடமுல்லைவாயில் தேவாரம். 1-வது பாட்டு.

(4) "சிவமே பெறுந்திரு வெய்திற்றிலேன்"
மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகம்-திருச்சதகம். 5-வது பாட்டு.

(5) "செயலோங் கெயிலெரி செய்தபினின்றோர் திருமுகமே" திருக்கோவையார். 327-வது பாட்டு.

(6) "திருவளர் திருச்சிற்றம்பலமே"
கருவூர்த்தேவர் திருவிசைப்பா-கோயில் 1முதல் 11பாட்டுகள்.

(7) "சீருந்திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக்கீழ்" திருப்பல்லாண்டு, 7-வது பாட்டு.

(8) "திருவடிக்கட் சேருந் திரு"
காரைக்காலம்மையார் அற்புதத்திருவந்தாதி, 47-வது பாட்டு.

(9) "மங்கலமாந் திருவேடத் துடனின்றீர்"
பெரியபுராணம் அப்பூதியடிகணாயனார்புராணம்,15வதுபாட்டு.

(10) "பரமனைப் பயிலுந்திருவுடையா ரெவரேனு மவர் கண்டீர்" நம்மாழ்வார் திருவாய்மொழி, 3ம் பத்து, 7வது பயிலும் க-வது பாட்டு.

(11) "தெரிவுறக்கேட்ட திருத்தகுநல்லீர்"
சிலப்பதிகாரம் 30-வது வரந்தருகாதை 185-வது வரி

(12) "திருவறமெய்துதல் சித்தமென்றுணர் நீ"
மணிமேகலை 10 மந்திரங்கொடுத்தகாதை, 85-வதுவரி.

(13) "பெரியவன் திருமொழி பிறழ்தலின்றியே"
சிவகசிந்தாமணி பதுமையாரிலம்பகம், 46-வது பாட்டு.

(14) "திருமாவளவன்(......=கரிகாற் சோழன்)" பட்டினப்பாலை 299-வது வரி.

(15) "திரு உருவாளர் அநுபவநிலை"
தாயுமான சுவாமிகள் பாடல் ஆரணம் 9-வது பாட்டு.

(16) "முற்றிய திருவின் மூவேந்தாயினும்"
(முற்றிய திரு=நிறைந்த செல்வமாகிய அருள்.) புறநானூறு 205-வது பாட்டு.

7 இனி அருள் என்ற முதற்பொருளில் வழங்கப்பட்டுவந்த திரு அருளினின்றும் வேறுகாத சிவபெருமானைக் குறிக்கப் பல இடங்களில் தமிழ் மறை பன்னிரு திருமுறை நூல்களிலும் வழங்கப்பட்டுவந்துள்ளன. அவ்வாறு வழங்கப்படும்பொழுது சில இடங்களில் திரு என்றும் சில இடங்களில் திரு உடையான் அல்லது திரு உருவுடையான் என்றும் சில இடங்களில் திருவினன் அல்லது திருவன் என்றும் சில இடங்களில் திருவாளன் என்றும் வந்துள்ளன. அவ்வாறு வழங்கப்படும் சில இடங்களை இதன் அடியிலே குறிப்பிடுகின்றேன்.

"திருவினாருமையொடு மொன்றி நின்றதோர் திருவினன்"
திருஞானசம்பந்த சுவாமிகள் திருவிற்கோலம் தேவாரம் 1-வது பாட்டு.

(2) "திருவே யென்செல்வமே தேனே"
திருநாவுக்காசுசுவாமிகள் திருஆவடுதுறைத்திருத்தாண்டகம் 1-வது பாட்டு.

(3) "திருவனே திருவீழிமிழலையுட், குருவனே"
திருநாவுக்காசுசுவாமிகள் திருவீழிமிழலைக் குறுந்தொகை 5-வது பாட்டு.

(4) "வேய்புரை தோளி - தங்குமா திருவுருவுடையானை"
சுந்தரமூர்த்தி சுவாமிகள், தேவாரம் திருக்கோலக்கா 2-வது பாட்டு.

(5) "புயலினைத் திருவினைபொன்னின தொளியை"
சுந்தரமூர்த்திசுவாமிகள் திருக்கழுமலம் தேவாரம் 7வது பாட்டு.

(6) "திருவைப் பரவிநாந் தெள்ளேணங் கொட்டாமோ"
மாணிக்க வாசக சுவாமிகள் திருவாசகம் திருத்தெள்ளேணம், 15-வது பாட்டு.

(7) "முகமலர்ந்தெதிர் கொளுந் திருவே"
கருவூர்த்தேவர் திருவிசைப்பா, திருக்கீழ்க் கோட்டூர் மணியம்பலம், 11-வது பாட்டு.

(8) "தேடியுடன் சென்றத் திருவினைக் கைக்கொண்டு"
திருமந்திரம், 667-வது பாட்டு.

(9) "பத்துத் திக்கும் பணிநுதற்கட் டிருவாளன்றிருவடியே"
11-வது திருமுறை, மூத்தநாயனார் திருவிரட்டை மணிமாலை, 2-வது பாட்டு.

(10) " திருவாளன்றிருநீறு திலகவதியாரளிப்ப "
பெரியபுராணம் திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம், 67-வது பாட்டு.

8. அருட்சத்தியோடு கூடி நிற்கிற சிவபெருமான் ஆன்மாவினுடைய ஆணவமலத்தைக் கண்டு சகியாமையினால் இரக்கம் கொண்ட அவதாரத்தில் அந்த அருட்சத்தி, பராசத்தி என்று கூறப்படும். ஆதலின் அருளைக் குறிக்க வழங்கப்பட்டு வந்த திரு என்ற சொல் பராசத்தியைக் குறிக்கத் திருமூலர் திருமந்திரம் 1123-வது பாட்டில் (இராமணசாஸ்திரிகள் பதிப்பு) "தேவின் கிழத்தி திருவாம் சிவமங்கை" என்றும் 1137-வது பாட்டில் 'திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றருளே" என்றும் கூறி அருளினர். இந்தப் பராசத்தி ஆன்மாவினுடைய ஆணவ மலத்தைத் தீர்ப்பதற்கு நானே அன்றி வேறொரு முதலில்லை என நின்ற அவதாரத்தில் ஆதிசத்தி அல்லது திரோதானசத்தி என்று கூறப்படும். இந்தத் திரோதானசத்தியே ஆன்மாக்களைப் பேரின்பமடையப் பக்குவப்படுத்தும் பொருட்டு உலகவாழ்க்கையினது கட்டில் அமிழ்த்தும் சத்தி. திருநாவுக்கரசுசுவாமிகள் "பொய்மாயப் பெருங்கடலிற் புலம்பாநின்ற புண்ணியங்கா டவினைகாள் திருவே நீங்கள்" என்ற திருவாரூர்த் திருத்தாண்டகப் பாட்டில் திரோதான சத்தியைத் 'திரு' என்ற சொல்லாற் குறித்தருளினர். அவர் வேறொரு திருவாரூர்த் திருத்தாண்டகப்பாட்டில் " திருவினாள் " சேர்வதற்கு முன்னோ பின்னோ "திருவாரூர் கோயிலாக்கொண்ட நாளே" என்று திருவினாள் (திரு + இன் + ஆள்) என்ற சொல்லால் உமாதேவியாரைக் குறித்தருளினர். அதனைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் "பொன்னும் மெய்ப்பொருளுந் தருவானைப் போகமுந்

திருவும் புணர்ப்பானை," என்ற தேவாரப்பாவில் வீடு என்ற பொருளில் வழங்கியருளினர். இவ்வாறு திரு என்ற சொல் பராசத்தியையும் திரோதான சத்தியையும் உமாதேவியாரையும் வீட்டினையும் குறிக்கப் பன்னிரு திருமுறை நூல்களில் சில இடங்களிலே தான் வழங்கப்பட்டு வந்துள்ளது. அச்சொல் காப்புக்கடவுளாகிய திருமாலினுடைய சத்தி இலக்குமியைக் குறிக்கவும் உலகச்செல்வத்தைக் குறிக்கவும் பன்னிருதிருமுறை நூல்களிலன்றிச் சங்க இலக்கிய நூல்களிலும் பிற இலக்கிய நூல்களிலும் அளவுபடாத பல இடங்களில் வழங்கப்பட்டு வந்திருக்கின்றது. அஃது அழகு என்ற பொருளிலும், பொலிவு என்ற பொருளிலும், சிறப்பு என்ற பொருளிலும், நன்மை அல்லது நல்வினை என்ற பொருளிலும் ஒளி என்ற பொருளிலும், சங்க இலக்கிய நூல்களிலும் பிற இலக்கிய நூல்களிலும் சிற்சில இடங்களில் வழங்கப்பட்டு வந்திருக்கின்றது. அழகு, பொலிவு, சிறப்பு, நன்மை, நல்வினை, ஒளி ஆகிய இந்தக் குணங்களெல்லாம் அருளால் உண்டாதலின் திரு அவைகளுக்குப் பெயராய் வந்தது. விரிவஞ்சி இப்பொருள்களுக்கு இங்கே எடுத்துக்காட்டுகள் குறிக்கப்படவில்லை.

9. மேலே 6, 7, 8 பத்திகளிற் கூறியவாற்ருல் திரு என்ற சொல் அருள் என்ற முதற்பொருளில் மிகுதியாகப் பன்னிரு திருமுறை நூல்களிலும் குறைவாகப் பிற தமிழ் நூல்களிலும் வழங்கப்பட்டுவந்துள்ளது என்றும், இறைவன் என்ற பொருளிலும், அருட்சத்திகளாகிய உமாதேவியார் இலக்குமி தேவியார் என்ற பொருள்களிலும் பன்னிருதிருமுறை நூல்களிலும் திருவாய்மொழியிலும் பலவிடங்களில் வழங்கப்பட்டுவந்துள்ளது என்றும் நாம் அறியலாம். திரு என்ற சொல் இறைவனைக் குறிக்க அருள் நூல்களல்லாத பிறநூல்களில் வழங்கப்பட்டிருத்தலைக் காண்பது அரிது. அருளையும் அருளையுடைய இறைவனையும் குறிக்க அருள் நூல்களில் மாத்திரம் மிக்கு வழங்கப்படுதல் இயல்பே. இதுவன்றி அருளோடு தொடர்புடைய உயிர்ப்பொருள்களுக்கும் உயிரில் பொருள்களுக்கும் முன்பாக பண்டைத் தமிழர்கள் மிகுதியாக திரு என்ற அடை மொழியைச் சேர்த்தே வழங்கி வந்திருக்கிறார்கள். அருள் நூல்களில் அருட்பொருள்களின் பெயர்களைத் 'திரு' என்ற அடைமொழியின்றிக் காண்பது அரிது. இதனல் நாம் கருதி அறிவது என்னவெனில் பண்டைத் தமிழ்மக்கள் உலகில்

வீட்டுநெறி வாழ்விலன்றி உலகநெறிவாழ்விலும் இறைவனது அருளையே தாரகமாகக்கொண்டு வாழ்ந்துவந்தார்கள் என்பது. பண்டைத்தமிழ்மக்களது நாகரிகத்துக்கு இறைவனது அருள் அடிப்படையாயிருந்ததனுல் அவர்கள் தங்கள் கூட்டமக்களிடத்தில் மாத்திரமன்றி பிறகூட்டமக்களிடத்திலும், தங்கள் நாட்டு மக்களிடத்திலன்றிப் பிறநாட்டுமக்களிடத்திலும், மக்கள் உயிர்களிடத்திலன்றிப் பிற உயிர்களிடத்திலும் அன்புடையவர்களாய் ஒழுகி வந்தார்கள். அவர்களிடத்தில் கூட்டுவாழ்க்கை (Co-operative life) அன்றி போட்டிவாழ்க்கை (Competitive life) கிடையாது. போட்டி வாழ்க்கை அவர்களிடத்தில் இல்லை என்பது பண்டைக் காலத்தில் நடைபெற்று வந்த கிராமவாழ்க்கை முறையினுல் நாம் அறியலாம். "எவ்வுயிரும் நீங்காதுறையு மிறை சிவனென் றெவ்வுயிர்க்கு மன்பாயிரு" என்பது அவர்கள் கடைப்பிடித்தொழுகின கட்டுரை மொழி (motto) யாயிருந்தது. அவர்கள் தங்கள் வாழ்க்கையில் அருளைக் கைவிட்டொழுகினதனுல் தாழ்வான நிலைமையை யடைந்தார்கள். அருளை மறந்து அருளிருக்கவேண்டிய விடத்தில் பொருளைவைத்துப் போற்றி ஒழுகுவதனுலேதான் தற்கால உலகவாழ்க்கை மிக்க துன்பமும் குழப்பமும் கலகமும் அமைதியின்மையு முடையதாயிருக்கிறது. உலகம் இந்த இடர் நிலையினின்றும் நீங்கி இன்ப நிலையை அடைய அருள்வழியன்றி வேறு வழியில்லை. மக்கள் இந்த உண்மையை அறிந்து கைக்கொண்டு ஒழுகி உய்ய இறைவன் திருவருள் செய்வாராக.

---

# பதிற்றுப் பத்து விளக்கம்

(பண்டிட் A. நடராஜ பிள்ளை அவர்கள்)

(முன் ௲௨-ம் பக்கத் தொடர்ச்சி)

## ரு. இரண்டாம்பத்து

(பதிகம்)

சேரநாட்டில் உதியஞ்சேரல் என்ற சேரவரசன் ஒருவன் இருந்தான். அவன் அழியாத பெரும் புகழையுடையவன். அவன் எப்பொழுதும் குற்றமில்லாத உண்மை மொழிகளையே பேசுவான். அவனிடத்தில், இனிமையான வொலியினை யுண்டாக்கும் அருமையான முரசமொன்றுண்டு. அவனுடைய

மனைவி பெயர் வேண்மாள் நல்லினியாம். அவள் வெளியன் என்ற சிற்றரசனுடைய செல்வமகளாவள். இவ்விருவர்க்கும் ஆண் குழந்தை யொன்றிருந்தது. அதற்கு நெடுஞ்சேரலாதன் என்று பெயர். நெடுஞ்சேரலாதன் இளமையிலேயே மிகுந்த வீர முள்ளவனாக விளங்கினான். அவன் பட்டத்துக்கு வந்தவுடன் வட நாட்டின்மேற் படை யெடுத்துச் சென்றான்; அங்குள்ள பல ஆரியவரசர்களை வென்றான். இமயமலையில் தனது விற்கொடியை எழுதுவித்தான். இதனால், அவனுக்கு இமயவரம்பன் என்ற சிறப் புப்பெயருங் கிடைத்தது.

கொடுமொழிகளைக் கூறி, அவனை எதிர்த்த யவனர்கள் பலர் தோல்வியுற்றார்கள். தோல்வியுற்றவர்கள் அவனாற் சிறைப் பட்டார்கள். அவர்களுடைய தலையில் நெய் பெய்யப்பட்டது; கைகள் பின்னாற் சேர்த்துக் கட்டப்பட்டன. விலையுயர்ந்த நகை களும், மேன்மையான வயிரங்களும் அவர்களிடமிருந்து கப்பப் பொருள்களாகக் கைப்பற்றப்பட்டன. அவன் அவைகளைச் சேர நாட்டுக்குக் கொண்டுவந்து, வீரர்களுக்கும், புலவர்களுக்கும் வெகுமதியாகக் கொடுத்தான். கடல்சூழ்ந்த தமிழ்நாடு முழுவதும் அவனுடைய ஆட்சியில் விளங்கியது. அவனை எதிர்த்த எல்லா அரசர்களும் அவனால் அடக்கப்பட்டார்கள்.

இங்ஙனமாக, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் இந்நில வுலகில் ஐம்பத்தெட்டியாண்டு வீற்றிருந்து, அரசுபுரிந்தான். இவ னைக் குமட்டூர்க்கண்ணனார் என்ற பெரும்புலவர் பத்துப்பாட்டுக் களாற் பாடிப் புகழ்ந்தார். அவைகள் பத்தும் புண்ணுமிழ்குருதி, மறம் வீங்கு பல்புகழ், பூத்த நெய்தல், சான்றோர் மெய்ம்மறை, நிரையவெள்ளம், துயிலின்பாயல், வலம்படு வியன்பணை, கூந்தல் விறலியர், வளனறு பைதிரம், அட்டு மலர்மார்பன் எனச் சிறப்புப் பெயர்கள் பெற்றுத் திகழ்ந்தன. இப்பாடல்களைப் பாடிய புலவ ராகிய குமட்டூர்க்கண்ணனார்க்கு இமயவரம்பன் நெடுஞ்சே லாதன் உம்பற்காடு என்ற நாட்டிலுள்ள ஐஞ்ஞூறு ஊர்களைப் பிரமதாயமா (அந்தணர்களுக்கு இறையிலியா)கக் கொடுத்தான். அவருக்குத் தென்னாட்டு வருவாயில் பாதி அவனாற் கொடுக்கப் பட்டது. இவருடைய ஊர் குமட்டூர் என்பதைக் குமட்டூர் என்ற பெயரமைப்பினாலும், இவருடைய குலம் அந்தணர்குல மெனப் பிரமதாயம் பெற்ற முறையினாலும் தெளியலாம்.

# (1) புண்ணுமிழ் குருதி

## (கக) பாட்டு

வரைமருள் புணரி வான்பிசி ருடைய
வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூ
னளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி
யணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ்

சூருடை முழுமுத றடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்குச்
செவ்வா யெஃகம் விலங்குந ரறுப்ப
வருநிறந் திறந்த புண்ணுமிழ் குருதியின்
மணிநிற விருங்கழி நீர்நிறம் பெயர்ந்து

மனாலக் கலவை போலவரண் கொன்று
முரண்மிகு சிறப்பி னுயர்ந்த வூக்கலை
பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்
கடியுடை முழுமுத றுமிய வேஎய்
வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்

நாரரி நறவி னார மார்பிற்
போரடு தானைச் சேர லாத!
மார்புமலி பைந்தா ரோடையொடு விளங்கும்
வலனுயர் மருப்பிற் பழிதீர் யானைப்
பொலனணி யெருத்த மேல்கொண்டு பொலிந்தநின்

பலர்புகழ் செல்வ மினிதுகண் டிகுமே;
கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி
பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவு
மாரியர் துவன்றிய பேரிசை யிமயந்
தென்னங் குமரியோ டாயிடை

மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே.

## கொண்டு கூட்டு

[7 செவ்வா யெஃகம் விலங்குந ரறுப்ப
வருநிறந் திறந்த புண்ணுமிழ் குருதியின்
மணிநிற விருங்கழி நீர்நிறம் பெயர்ந்து
மனலக் கலவை போல வரண் கொன்று
முரண்மிகு சிறப்பி னுயர்ந்த வூக்கலை
பலர்மொசிந் தோம்பிய திரள்பூங் கடம்பின்
கடியுடை முழுமுத றுமிய வேஎய் 13]
[21 கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி
பரந்திலங் கருவியொடு நரந்தங் கனவு
மாரியர் துவன்றிய பேரிசை யிமயந்
தென்னங் குமரியொ டாயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே 25]
[14 வென்றெறி முழங்குபணை செய்த வெல்போர்
நாரரி நறவி னா மார்பிற்
போரடு தானைச் சேர லாத 16]
[1 வரைமருள் புணரி வான்பிசி ருடைய
வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூ
னளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி
யணங்குடை யவுண ரேமம் புணர்க்குஞ்
சூருடை முழுமுத றடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு 6]
[17 மார்புமலி பைந்தா ரோடையொடு விளங்கும்
வலனுயர் மருப்பிற் பழிதீர் யானைப்
பொலனணி யெருத்த மேல்கொண்டு பொலிந்தநின்
பலர்புகழ் செல்வ மினிதுகண் டிகுமே 20]

### பதவுரை

செவ்வாய் - (இரத்தத்தால்) சிவந்த வாயினையுடைய, எஃகம் - கைவேலானது, விலங்குநர் - (போரில்) எதிர்த்தவர்களை, அறுப்ப - குத்தித் தள்ளுதலினாலே, அருந்திறம் - எதிரிகளுடைய அருமை

யான மார்புகள், திறந்த - திறக்கப்பட்டதனாலுண்டாகிய; புண் - காயங்களினின்றும், உமிழ் - வெளிப்படும்படியான, குருதியின் - இரத்த வெள்ளத்தினாலே, மணிநிறம் - நீலமணிபோன்ற நிறத்தினையுடைய, இரும்கழிநீர் - பெரிய கடற்கழிகளிலுள்ள கடல் நீரானது, நிறம் பெயர்ந்து-தன்னுடைய நீலநிறம் மாறப்பெற்று, மனாலக்கலவை - குங்குமச்சாந்து, போல - போலாகும்படி, அரண் கொன்று—எதிரிகளுடைய காவலிடங்களை யழித்து, முரண்மிகு சிறப்பின் - மாறுபாடாகிய மிகுந்த மேன்மையினையும், உயர்ந்த ஊக்கல் - அதிகமாகிய ஊக்கத்தினையும் கொண்ட, பலர் - அநேக வீரர்கள், மொசிந்து - சூழ்ந்து, ஓம்பிய - காவல் செய்து கொண்டிருந்த, திரள் - திரண்ட, பூம் - அழகிய, கடம்பின் - கடம்பமரத்தினுடைய, கடி உடை - சிறப்போடு கூடிய, முழுமுதல் - அடிப்பாக முழுவதும், துமிய - சிதைந்து துகளாகும்படி, ஏவி - படைகளைச் செலுத்தி, கவிர் - முள்ளையுடைய முருக்கமரங்கள், ததைதை - நெருங்கி நிற்கும்படியான, சிலம்பில்-மலைச்சாரல்களில், துஞ்சும் - (முனிவர்களுடைய ஆணைகாரணமாக முருக்கமரங்களாலும் பிற விலங்குகளாலும் மக்களாலும் இடையூறின்றி இராக்காலத்தில் இனிதாக) உறங்குகின்ற, கவரி - கவரிமான்கள், பரந்து இலங்கு அருவியொடு - (பகற்காலத்திற் பருகி மகிழ்ந்த) பரவி விளங்கி விழுகின்ற அருவிகளுடன், நரந்தம் - (மேய்ந்து சுவைகண்ட) நாரத்தை மரங்களை, கனவும் - கனவில் கண்டுகொண்டிருக்கும்படியான, ஆரியர் - முனிவர்கள், துவன்றிய - நெருங்கிவசிக்கும்படியான, பேரிசை - மிகுந்த புகழையுடைய, இமயம் - இமயமலை முதல், தென்னம் - தெற்கேயுள்ள, குமரியொடு - கன்னியா குமரிவரையுள்ள, ஆ இடை - அந்தப் பல நாடுகளிலுள்ள, மன் - அரசர்களில், மீக்கூறுநர் - மிகவும் புகழ்ந்து கூறப்படும் அரசர்களுடைய, மறம் - வலிமை, தப - கெடும்படி, கடந்து - அழித்து, வென்று - வெற்றி கொண்டு, எறி - கோலால் அடித்து, முழங்கு - ஒலிக்கும்படியான, பணை - முரசவாத்தியத்தை, செய்த - முழக்கும்படியான, வெல் போர் - வெற்றி கொண்ட பல போர்களையும், நார் - அன்புடனே, அரி - வண்டுகள் சூழ்ந்து உண்ணும்படியான, நறவின் - தேனினையுடைய, ஆரம் - மலர்மாலைகளை யணிந்த, மார்பின் - மார்பினையும், போர் - போர்க்களத்தில் எதிர்த்த எதிரிகளை, அடு - கொல்லும்படியான,

தானை - சேனையினையுமுடைய, சேரலாத - நெடுஞ்சேரலாதனே, வரைமருள் - மலைகளோவென மயங்கக்கூடிய, புணரி - அலைகளி லிருந்துண்டாகும், வான் - பெரிய, பிசிர் உடைய் - துளிகளைக் கொண்ட, வளி பாய்ந்து அட்ட - காற்று வீசித் தாக்குதலால், துளங்கு - ஆடிக் கொண்டிருக்கும்படியான, இரும் கமம் சூல் - மிகுந்து நிறைந்த நீரையுடைய, நளி - குளிர்ச்சிமிக்க, இரும் - பெரிய, பரப்பின் - இடத்தினையுடைய, மாகடல் - கருங்கடலிலே, முன்னி - இருந்து, அணங்கு உடை-தேவர்களுக்கு வருத்தத்தை யுண்டாக்கக் கூடியதும், அவுணர் - அசுரர்களுக்கு, ஏமம்புணர்க் கும் - காவலைச் செய்து கொண்டிருக்கக் கூடியதும், சூர்உடை - சூரபதுமனுக்குச் சொந்தமானதுமாகிய, முழுமுதல்-மாமரத்தினு டைய அடிப்பாகமுழுவதையும், தடிந்த-வேலாலே வெட்டியெறிந்த, பேரிசை - சிறந்த புகழையும், கடும் சினம் - மிகுந்த கோபத்தையுங், விறல் - வலிமையினையும் கொண்ட, வேள் - குமரக்கடவுள், களிறு- யானையின் மீது, ஊர்ந்தாங்கு - ஏறிச் சென்றாற்போல, மார்புமலி- கழுத்திலிருந்து தொங்குகின்ற, பைந்தார் - பச்சைமணி மாலைகள், ஓடை ஒடு - நெற்றிப் பட்டத்துடன் கூடி, விளங்கும் - பிரகாசிக் கும் படியான, வலன் உயர் - வெற்றி மிக்க, மருப்பின் - கொம்பு களையுடைய, பழிதீர் - குற்றமில்லாத, யானை - யானையினுடைய, பொலன் அணி - பொன்னால் அலங்கரிக்கப்பட்ட, எருத்தம் - பிடரியிலே, மேல் கொண்டு - எழுந்தருளி, பொலிந்த - விளங்கிய, நின் - உன்னுடைய, பலர் புகழ் செல்வம் - பல புலவர்களாலும் புகழப்பட்ட செல்வத்தை, இனிது கண்டிகும் - கண்டு மகிழ்கின் றோம்.

(தொடரும்.)

---

# போர்க்கருவிகள் போந்த புதுமை

[காழி. சிவ. கண்ணுசாமி B. A.]

## நிலக்கனியும் நீர்க்கனியும்

(முன் ௩௬௬-ம் பக்கத் தொடர்ச்சி)

நீர்க்கனிகள் என்பன நிலக்கனிகளைப்போன்று வேண்டி யாங்கு வேண்டுமாறு அமைக்கப்படுவனவல்ல; படைச்சாலைக ளில் முன் கூட்டியே மிக்க திறமையுடன் செய்யப்பட்டு, நீர் மூழ்

குவோராலோ, அன்றி நாவாய்களின் மூலமோ கடலினுட் செலுத்தப்படுவனவாம்.

நீர்க்கனிகள் இருவேறு வகைப்படும்: போரில்லாக் காலங்களில் துறைமுகங்களையுங் கால்வாய்களையும் காப்பான் வேண்டியமைக்கப்படும் நிலைக்கனிவகை யொன்று; போர்க்காலத்தே கப்பல்களிலிருந்து கடலகத்தே வேண்டுமிடத்து எறியப்படும் மிதவைக்கனிவகை மற்றொன்று.

இரும்பு அல்லது எஃகினாலாகிய இரு தகடுகளை இருப்படுப்புப்போல் திரண்ட உருவமையுமாறு இணைத்து அதனுள்ளே வெடிபஞ்சு வைத்துக் கெட்டித்து அதைச் சுத்திபோன்ற ஒரு கருவியினுதவியாலோ அன்றி மின்சாரத்தினுதவியாலோ வெடிக்கச் செய்வது நீர்க்கனி வெடியாகும்.

## நிலைக்கனி

இனி, துறைமுகங்களில் நிலைக்கனிகள் அமைப்ப தெவ்வாறெனிற் கூறுதும். கனிகளைச் செய்து நீர் மூழ்குவோர் வசங் கொடுத்தால் அவற்றை அவர்கள் துறைமுக எல்லைகளில் வேண்டுமிடங்களில், கல் அல்லது இரும்புபோன்ற கனமுள்ள பொருள்களைச் சேர்த்துக் கட்டி நீரினுள் இறக்கி விடுவார்கள். அதன்பின், அவற்றுள் வெடிக்கச் செய்வதற்காக இணைக்கப்பட்டிருக்கும் கம்பிகளை நீரினுள்ளாகவே இழுத்துக்கொண்டுபோய்க் கரையிலுள்ள பார்வைச் சாவடி (Observation Station) யிற் சேர்த்து விடுவார்கள். அச்சாவடியிலிருந்து எப்பொழுதும் கப்பற்போக்குவரவைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருக்கும் அலுவலாளி எதிரியின் கப்பல்கள் துறைமுக எல்லையோரங்களில் அமைக்கப்பட்டிருக்கும் நிலைக்கனிகளின் அருகாமையில் வருஞ் சமயம் பார்த்து அக்கனிகளை வெடிக்கச் செய்து கப்பல்களுக்குச் சேதம் விளைப்பான். இவை பெரும்பாலும் மின்சாரத்தின் உதவியினாலேயே வெடிக்குமாறு அமைக்கப்படும். இத்தகைய கனிகளைப் பார்வைக் கனிகள் (Observation Mines) என்று கூறலாம். இக்கனிகளிலுள்ள ஒரு நன்மை என்னவெனில் துறைமுகங்களுக்குள் வரும் கப்பல்களில் எக்கப்பலைத் தாக்கவேண்டு மென்று தோன்றுகிறதோ அதைமட்டும் இவற்றினுதவியால் தகர்த்து ஏனையவற்றை விட்டுவிடுதல் கூடுமென்பதே. ஆயினும் இவற்றில் ஒரு குறையு

முண்டு ; இவை இரவிற் பயன்படுமாறில்லை என்பதே அக்குறை யாகும்.

இனி, தாக்குகனி (Contact Mine) என்று மற்றொருவகை யுண்டு. அஃது பார்வைக்கனி யொத்தே இயற்றப்பட்டு, வெடிக்க உதவும் கம்பிகளையும் மின்சாரக் கருவியையும் தன்னகத்தே அடக்கினதாக இருக்கும். இக்கனி நீரில் ஊர்ந்துவரும் கப்பலின் அடிப்பகுதியால் தாக்குண்டால் தாக்குண்ட அக்கணமே வெடித்து அக்கப்பலுக்கு ஏதத்தை விளைக்கும்.

தாக்கினால் வெடிக்கக் கூடியதெனில், அலைகளின் மோதலி னால் தாக்குண்டு இக்கனி வெடிக்காதோ என வினவலாம். இக் கனி அவ்வாறு வெடிக்க முடியாதபடி இயற்றப்படுவதோடன்றி வெடிப்பதற்காகக் குறிப்பிட்ட ஒரு பகுதியில் வெளிப்புறமாக அமைக்கப்பட்டிருக்கும் முடக்குருவமைந்த ஒரு கருவியைத்திட முடன் தாக்கினலொழிய வெடிக்க முடியாதவாறும் இயற்றப் படுகிறது. இதனுதவியால் துறைமுகங்களை எதிரிகளின் தாக்குதலி னின்றும் இரவிற் காப்பது எளிதாகிறது. பார்வைக்கனியிலே தாக்குகனியின் சிறப்புப் பண்பையுஞ் சேர்த்துக் கனியமைக்கும் முறையும் பின்னர்க் கண்டுபிடிக்கப்பட்டது. பகற்காலத்தே பார்வைக் கனியாகவும் இராக்காலத்தே தாக்குகனியாகவும் இம் முறைப்படி யமைந்த கனிகள் பயன் விளைக்காநிற்கும்.

## மிதவைக்கனி

எனினும் இத்தகைய நிலைக்கனிகளும் நாளேற வேறப் பெரும்பாலும் பயன்படா தொழிந்தன. எண்ணிறந்தனவாகக் கப்பல்களிற் செய்து வைக்கப்பட்டு வேண்டுமிடத்து வேண் டுங்கால் ஒவ்வொன்றாகக் கடலினுட் செலுத்தப்பட்டு மிதந்து சென்று ஏதம் விளைக்கும் மிதவைக் கனிகளே (Floating Mines) இற்றைநாளிற் பெரிதும் பயன்பட்டு வருகின்றன. சென்ற ஐரோப்பியப் பெரும்போர்த் தொடக்கத்தில் முதன்முதலாக ஜெர்மானியர் இத்தகைய மிதவைக் கனிகளைக் கண்டு பிடித்துப் பயன்படுத்தினர். இம் மிதவைக் கனிகளுக்கு வெடிப்பதற்காகக் கரையிலிருந்து கம்பிகள் வரவேண்டியதில்லை யாகையால் அவை களைத் துறைமுகங்களிலேயேயன்றிக் கடலில் எவ்விடத்திலாயினும் எறியலா மென்பதும், அவைகளெல்லாம் தாக்குகனிகளாகத்தாம்

இருத்தல் வேண்டுமென்பதும் எளிதில் ஊகித்துணரப்படும். ஆயினும் நினைத்த விடத்தில் எறியப்படுவதால் அவைகள் எண்ணியவாறு பயன்படுதல் யாங்ஙனம் என்று கேட்டல் கூடும். அதை யொருசிறிது விளக்குதும்.

கப்பலிலிருந்து எறிந்துவிடப்படும் மிதவைக்கனிகள் நீர்மட்டத்திற்குமேல் மிதந்துகொண்டிருந்தால் அவை எளிதிற் கண்டுபிடிக்கப்பட்டு ஏதம் விளைக்காதவாறு அகற்றிவிடப்படுமன்றோ? ஆகலின் அவை அவ்வாறு மிதத்தல் கூடாது என்பது பெறப்படும். மிதக்காமல் நீரினடிவரைச் சென்று தரையிற்றங்கி விடினும் அவை கருதியபயனை விளைக்கா தொழியு மென்பதும் கூறுதுணரப்படும். குறிப்பிட்ட ஒரு அளவில் நீர்மட்டத்திற்குக் கீழே அவை மிதந்து கொண்டிருந்தால்தான் அவ்வழி வந்து அவைகளை அறியாமையால் தாக்கும் கப்பல்களுக்கு அவை சேதம் விளைத்தல் கூடும். ஆனால் ஒரு பொருளை நீர் மட்டத்தின் மேல் வேண்டுமானால் மிதக்கவைத்தல் கூடுமேயன்றி நீரினுள் மற்றெப்பகுதியிலும் மிதக்க வைப்பதென்பது கூடாததொன்றாகும். நீர்மட்டத்தின் மேல் மிதவாது ஒரு பொருள் உட்சென்றதாயின் அது நேரே நீரினடிக்குச் சென்று தரையிற்றங்கிவிடுமேயன்றி நடுவே எங்கணும் மிதந்து திரியாது. "பலூன்" என்ற புகைக் கூண்டு காற்றின் நடுவே பறந்து செல்லும் போது நீரினுள் ஒரு பொருள் ஏன் மிதத்தல் கூடாதென ஐயுறலாம். காற்றிற்கு எளிதில் அமுங்கி யொடுங்கும் ஆற்றல் (Compressibility) உள்ளது. அதனாற்றான், நிலத்தருகேயுள்ள காற்றுத் திண்ணியதாக விருக்கிறது. மேலுள்ள காற்றுப்பகுதியனைத்தின் கனத்தினையும் நிலத்தை யடுத்துள்ள இப்பகுதி தாங்கி நிற்கின்றதே அது அவ்வாறு திண்ணியதாக இருப்பதற்கேதுவாகும். நிலத்தருகாமையை நீங்கி மேலே செல்லச் செல்லக் காற்றின் திண்மை குறைந்து காணப்படும். ஆதலால்தான் நிலத்தில் தங்கியிருந்த போது தன் எடைக்கு மேற்பட்ட எடையுள்ள காற்றை அப்புறப்படுத்தி அக் காற்றிருந்த இடத்தில் தங்கியிருந்த புகைக் கூண்டு மேனோக்கி எழுந்து செல்லுங்கால் தன் எடைக்கு ஒத்த எடையுள்ள காற்று மண்டிலம் வரையிற் சென்று அங்கேயே மிதந்து நின்று அதற்குமேல் செல்லா தொழிகிறது. காற்றிற்குள்ள இப்பெற்றி நீரினுக்கும் அமையாதோ எனின் நீருக்கு அமுங்கி யொடுங்கும் ஆற்றல் இல்லை யாதலின் உட்சென்ற

பொருள் நேரே அடிப்பகுதிக்குச் சென்று தங்கி விடுகிறது என விடுக்க.

அற்றாயின், ஒரு மிதவைக்கனி நீரினுள் மிதந்து தாக்குமாறு செய்தல் கூடுமோ? கூடும்; ஒரு இயக்கி (Motor) யும் ஒரு செலுத்தி (Propeller)யும் இருந்தாற் கூடும். வெடிபொருளுடன் ஒரு இயக்கியையும் ஒரு செலுத்தியையும் உள்ளமைத்து இக்கனி இயற்றப்படுகின்றது. அன்றியும் ஒரு அடைப்பில் திணித்த காற்றும் அதனுள்ளிருக்கும். அக்காற்றே இயக்கியை இயக்கச் செய்வதாகும். காற்றினல் இயக்குற்ற இயக்கி உடனே செலுத்து கருவினைய இயக்குகிறது. நீரினுள் விசையாகச் சென்று கப்பல்களைத்தாக்கும் நீர்க்கணை (Torpedo)யும் இவ்வாறே தான் இயக்கப்படுகிறது. ஆயினும் அதிலுள்ள செலுத்துகருவி முன்னோக்கி இயக்க, மிதவைக்கனியின்கணுள்ள செலுத்துகருவி மேனோக்கி இயக்குகிறது.

ஒரு மிதவைக்கனி கப்பலிலிருந்து கடலினுள் எறியப் பட்டவுடன் அது ஒரு குறிப்பிட்ட அளவுவரை நீரினுள் அழுந்திச் செல்லுகிறது. அவ்வெல்லையைச் சேர்ந்தவுடன் உள்ளிருக்கும் திணித்த காற்று விடுபட்டு இயக்கியை இயக்குகிறது. இயக்கியின் இயக்கத்தால் செலுத்துகருவி இயக்கமுற்று ஏறக்குறைய நீர் மட்டம் வரையில் கனியை மேனோக்கிச் செலுத்தி வருகிறது. நீர்மட்டத்தின் அருகில் வந்தவுடனேயோ இயக்கி தானகவே நின்றுவிடுகிறது; இயக்கி நிற்கச் செலுத்தியும் நிற்றலுறுகிறது. உடனே கனி மறுபடியும் இயற்கையாகக் கீழ்நோக்கி அமிழ்ந்து செல்லுகிறது. முற்கூறிய அக்குறிப்பிட்ட எல்லைவரை யழுந்திச் சென்றதும் முன்போல் இயக்கி இயக்கமுறலால் மீண்டும் மேலே வருகிறது. இவ்வாறே உள்ளிருக்கும் திணித்தகாற்றுச் செலவாகும்வரையில் அது எப்பொழுதும் மேலுங் கீழுமாக ஏறி யிறங்கிக் கொண்டிருக்கும். குறிப்பிட்ட அவ் அளவின் கீழ் அது அமிழ்வதில்லை; குறிப்பிட்ட ஒரு அளவின்மேல் அது மிதப்பதுமில்லை. மேலுங் கீழுமாக எப்பொழுதும் இயங்கிக்கொண்டிருக்கும் இந்நிலையில் ஒரு கப்பல் எதிர்ப்பட்டு அதனல் தாக்குறின் அது உடனே வெடித்துத் தாக்கிய அக்கப்பலைத் தகர்க்கும். இயங்குமாற்றலொழிந்தபின் ஒருவழியாக அது அமிழ்ந் தொழிந்து போகும் என்று முன்னர்க் கூறப்பட்டது. அதுவும்

ஒருவகையில் நல மென்றேதான் கூறல் வேண்டும். இன்றேல் நாட்கணைக்காக, திங்கட் கணைக்காக, ஆண்டுக்கணைக்காக மிதந்து சென்று எதிர்பாராத வகையில் பண்டக் கப்பல், பயணக் கப்பல் முதலியவற்றைத் தாக்கி மக்களுயிருக்கும், உணவுப்பொருள் களுக்கும் எல்லையற்ற தீங்கை அது விளைக்கலாம். இத்தகைய ஒரு கனியை முதன்முதலாக இத்தாலிய நாவாய்ப்படையி லிருந்த படைத்தலைவர் ஈலியா என்பார் கண்டுபிடித்ததால் இதற்கு "ஈலியாக்கனி" என்று போர்த்துறையிற் பெயரிடப்பட்டது.

---

# கம்பர் காட்டும் செம்பொருள் விளக்கம்

(தமிழ்ப் பண்டிதர் திரு. மா. இராசமாணிக்கம் அவர்கள்.)

அமிழ்தினு மினிய தமிழ்மொழியதனை வளர்த்த மாபெரும் புலவராய கம்பர்பெருமான் தாம் இயற்றிய இராம காதையின் கண் தம் அரிய சமயக் கருத்துக்களையும் கடவுட்கொள்கையை யும் ஆங்காங்கே தெளிவுபடக் கூறிப் போந்தார். எனினும், கம்பராமாயணத்தை ஊன்றிப் படியாதார்க்கு இவை யெளிதிற் புலனுகாதென்பது தேற்றம்.

கம்பர் முதன்முதல் தமது விரிந்த கடவுட்கொள்கையைப் பரந்த அறிவுடன் விளக்குகின்ருர். ஆற்றுப்படலத்தில் சாயு நதி யின் பிறப்பைக் கூறுகையில், மழையே நதி தோன்றலுக்குக் காரணமென்ருர் ; மழை மேகபலத்தால் உண்டாவதென்ருர்; வெண்ணிற மேகம் கடனீரை யுண்டு கரிய நிறத்தை யடைந்த தென்ருர்:

"நீற ணிந்த கடவுள் நிறத்தவான்
ஆற ணிந்துசென் றுர்கவி மேய்ந்தகில்
சேற ணிந்த முலைத்திரு மங்கைதன்
வீற ணிந்தவன் மேனியின் மீண்டவே."

எனக் கனவு மொழிகளால் கழறியுள்ளார். 'சிவபிரானைப் போலச் சென்ற வெண்ணிறப் புயல்கள் கடல்நீரைக் கொண்ட

தாம் திருமால் போலத் திரும்பின' என்பதே இப்பாவின் பொருள். எனினும், இச்செய்யுளின் உள்ளுறையே யாம் ஊன்றிப் பார்த்தற் குரியதாம்.

கடல்நீரைக் குடிக்கச் சென்றது வெண்மேகம்; அது நீரற்றது; அதனால் உலகிற்குப் பயனில்லை. அத்தகைய வெண்மேகம் வானில் இருப்பின், மழையின்றி மாநிலத்தார் அல்லலுறுவர். ஆதலின், வெண்மேகம் அழித்தற் கடவுளாய சிவனாரை யொத்தது. என்னே கம்பர் காட்டும் உவமையின் பெருமை! இவ்வுவமை முகத்தான் கம்பர் நமக்குக் கூறுவதென்? அவர் கொள்கைதான் யாது? மேகம் என்பது ஒன்று. அஃது உருவத்தாலும் தொழிலாலும் வேறுபாடுடையதாக வெளித் தோன்றினும், மேகம் மேகமேயன்றோ? அத்தன்மையேபோலச் சிவனும் அரியும் தொழில் கருதி உருவ வேறுபாடுற்று நடிப்பவரல்லது உண்மையில் வேறுபட்டுத் தனித்திருப்பாரல்லர். அரியும் சிவனும் ஒன்றே என்பதை உணர்த்தக் கம்பரது விழுமிய உவமையே கொழுவிய சான்றாக நிற்கக் கண்டோம்.

'என் மதம் சிறந்தது; உன் மதம் தாழ்ந்தது' எனப் பேசி எதிர் வழக்கிடுவோர்க்கும் பாமர மக்களுக்கும் கம்பர் அறிவுறுத்தல் அழகியதே. 'இராமன் கதையைக் கூறப் போந்ததே என் தலையாய நோக்கம் என்று எண்ணவேண்டா; சமயவாதிகளே! உங்களுக்கு உண்மைப் பொருளை உவமை முகத்தான் விளங்கச் செய்யவும் எனது கொள்கையைத் தெரிவிக்கவும் இக்காதையில் விழைந்தேன்' என்று அறிவிப்பவராய்க் கம்பர் அடிக்கடி தம் காவியத்தில் கடவுள் கொள்கையைக் கவின்பெறக் கூறிப்போகும் பெற்றி பற்றற்றவரையும் பரமானந்தம் அடையச் செய்கிறது.

சாயு நதி மலையில் பிறந்தது; மலையினின்றும் இழிந்து பல பிரிவுகளாகி நிலத்தில் பாய்கின்றது. நிலத்தின் தன்மைக் கேற்றவாறு ஆழமான விடத்தில் அதிகம் தங்கியும் ஆழமற்ற விடத்தில் அதிகம் தங்காமலும் பலவாறு பாவிச் சென்று, இறுதியில் எல்லாக் கிளைகளும் கடலுள் சென்று மறைகின்றன. இந்நிலை, பல சமயங்களிலும் பரந்து நிற்கும் பரம்பொருளின் நிலையை ஒத்திருக்கின்றது என்ற பொருள்வைத்து,

'கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலும் இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையி லொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்த தன்றே.

எனக் கம்பர் கனிந்த மொழிகளால் கழறிப் போந்தார்.

நாட்டில் பலவாருகப் பிரிந்து பலதுறைகளிலும் பாவிப் பாயும் வெள்ளத்தின் பிறப்பிடம் மலை. அங்ஙனமே உலகில் பல திறப்பட்டு விளங்கும் சமயநெறிகளின் முதல்நிலை தோன்றியது இறைவனிடமே. வெள்ளம் பல கிளைகளாகப் பிரிந்து நிலத்திற் பாய்கின்றது. அவ்வாறே இறைவன்பால் தோன்றிய முதல்நிலை உலகில் பல சமயங்களாகப் பிரிந்தன. பிரிந்த கிளைநதிகள் பாயும் நிலத்திற் கேற்ப ஆழமுள்ளவிடத்தில் தேங்கும் ; ஆழமற்றவிடத்தில் தேங்காமல் ஓடும். அதுபோல, அறிவுள்ளவர் மாட்டுச் சமயநெறி தேங்கி, வளர்ந்தோங்கும் ; அறிவற்றவன்பால் தேங்கி வளராது. இங்ஙனம் பிரிந்து செல்லும் கிளைகள் பலவும் பாயும் நிலத்தின் தன்மையை அடைதல் இயல்பு. அஃதேபோல உண்மையான சமயநெறி மந்தபுத்தியுடைய மக்கள்பால் அகப்பட்டு அதன் உண்மைப் பொலிவினை இழந்து நிற்பதும் இயற்கை. பலவாகப் பிரிந்த கிளைநதிகள் முடிவில் கடலிற்சென்று கலக்கின்றன ; மறைகின்றன. அவ்வாறே, உலகில் பலவாருகப் பிரிந்த சமயநெறிகள் முடிவில் சென்றடைவது இறைவனிடமே. அவனிடம் கலந்து அவனிடமே மறைகின்றன என்பதே கம்பர் கொண்ட கருத்தாகும். இதனுல், அவர் மக்களுக்கு வற்புறுத்துவதுதான் யாது ?

"எம்மதமும் சம்மதமே என்ற கொள்கை உங்களிடம் இருக்கட்டும். அதனை மறந்து உலகில் 'கடவுள் இல்லை' என்று கூறுவோர் உளர். 'உண்டு' என்று உரைப்போரும் உளர். ஆனுல், இதில் எஃது உண்மை என்பதே ஆராயத் தக்கது. உலகத்தையும் படைப்புப் பொருள்களையும், சுடுகதிர் தண்கதிர் இவற்றையும் காணின், இவற்றை இயக்கும் சக்தி படைத்த சக்தி ஒன்று இருக்கவேண்டுமென்று அறிகிருேம். எனவே, கடவுள் உண்டென்பது தெள்ளிதில் உணரப்படுகின்றது. உண்மையான தத்துவம் அறிந்த அறிஞர் இதனை மறுக்கார்."

இவ்வுண்மையைக் கம்பர் வெகு அழகாகப் புலவர் வியக்கத் தகுந்தவாறு புலப்படுத்துகின்றார். "திருமணத்தின் பொருட்டுச் சீதையைப் பெண்கள் அழகுபெற அலங்கரித்தனர். சீதையின் இடைக்கு அழகுசெய்ய அம்மாதர் விரும்பினர். அவர்களிற் சிலர், சீதைக்கு இடையில்லை என்றனர்; சிலர் 'உண்டு' என்றனர். இடையின்றிப் பெண்ணொருத்தி இருக்க முடியாதென்பது ஒருதலை. ஆகவே, இவ்வுண்மையை உணர்ந்த பின்னர், அம்மகளிர் அறிவுபெற்றுச் சீதையின் இடையை அலங்கரித்தனர். மெய்யறிவு வாய்ந்த மேலோர், 'படைக்கப்பட்டுள்ள உலகத்தைக் கண்டு படைத்தவன் உளன் என்ற உண்மையை உணர்ந்ததே போன்று மகளிர் உண்மையை உணர்ந்து, 'சீதைக்கு இடையுண்டு' என்பதை நிச்சயித்து அதனை அழகுபெறச் செய்தனர்" என்று கூறும் கம்பர் மொழிகள் விழுமிய பொருள் அமைந்தவை.

"சில்லிய லோதிக் கொங்கைத் திரள்மணிக் கனகச் செப்பில்
வல்லியு மனங்கன் வில்லும் மான்மதச் சாந்தில் தீட்டி
பல்லியல் நெறியிற் பார்க்கும் பரம்பொருள் என்ன யார்க்கும்
இல்லையுண் டென்ன நின்ற இடையினுக் கிடுக்கண் செய்தார்."

(கோலங்காண் படலம்.)

இங்ஙனம் மேலும் இரண்டொரு இடங்களில் கம்பர் தமது 'கடவுள் கொள்கையை' இன்னபடியே கழறிச் செல்கின்றார். விரிவஞ்சி யாம் வரையாது விடுக்கின்றனம். கம்பர் பெருமானார் கொள்கை யாதெனை இதனைக் கண்ணுறும் அறிஞர் அறிந்து கொள்வர் என்று நம்புகிறோம். கம்பர், 'பரம்பொருள் ஒன்று உண்டு; அஃது அலகிலா விளையாட்டுடையது; எங்கும் நிறைந்தது; அது தன்னை நம்பினோர்க்கு வெளிப்படும்; நம்பாதார்க்கு வெளிப்படாது; வீணான சமயக்குரோதங்கள் கூடா; எம்மதமும் சம்மதமே; எம்மதத்தினும் உண்மை யுண்டு.' என்பனவே கம்பர் கொண்ட கடவுட் கொள்கையாம். இதனை நமக்கு அவர் முதலிலேயே பதியச் செய்திருக்கிறார். பாயிரத்தின் கண்ணேயே இதனைக் காணலாம்.

"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்,
நிலைபெறுத் தலும், நீக்கலும் நீங்கலா

அலகிலா விளையாட் டுடையா ரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே"

என்ற செந்தமிழ்ச் செய்யுள் ஒன்றே கம்பர் கொண்ட கடவுட் கொள்கையை வலியுறுத்தப் போதியதாகும். 'பிறமதத்தையோ மதத்தார்களையோ வெறுத்தல் வேண்டா' என்ற கொள்கையே கம்பர் வற்புறுத்துவதாம். எச்சமயமும் உண்மைச் சமயமே என்றும், சமயங்களெல்லாம் ஆண்டவனை அறியப் போந்தன வேயென்றும், ஆதலால், மக்கள் இயல்பிற்கு ஏற்றவாறு பல சமயங்கள் இருத்தலில் குற்றமில்லை யென்றும், ஆனால் பரந்த நோக்கத்துடன் சமயவாதங்களை அறவே ஒழித்து எல்லாம் பரம் பொருளின் தத்துவம் என்று அறிவுடன் அமைந்து இருத்தலே அழகுடைத்து என்றும் கம்பர் உணர்ந்திருந்தார். இவ்வுண்மையை அப்பெருமான் சீராமனைக் கண்ட காரிகையர் நிலையிலிருந்து வெளிப்படுத்துகின்றதை யுன்ன உவகை பெருகுகின்றது.

"தோள் கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கை கண்டாரு மஃதே
வாள் கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்?
ஊழ் கொண்ட சமயத்தன்னான் உருவு கண்டாரை ஒத்தார்"

(உலாவியற் படலம்)

"சீராமன் உலாவி வருவதைக் கண்ட காரிகையர் அவனது திரு வுருவத்தினைக் காண விழைந்தனர். அவர்கள் தத்தம் கண்களுக்கு முதலில் புலனாய அவயவத்தை நோக்கினர். அவர்களிற் சிலர் தோள் கண்டனர்; அதன் நிலையை முற்றிலும் அறிந்து வேறு அவயவத்தைக் காணமுடியாதவராயினர். இங்ஙனமே ஒவ்வொரு வரும் ஒவ்வோர் உறுப்பினைக் கண்டு மேற் செல்ல இயலாதாரா யினர். அந்நிலை எவ்வாறு இருந்ததெனின், 'ஒவ்வொரு சமயமும் இறைவனின் ஒரு சக்தியைக் கண்டு மயங்கி நிற்கின்றதன்றி அப்பெருமானின் முழுத் தோற்றத்தையும் சக்தியையும் அறிந்த பாடில்லை' என்ற உண்மையை ஒத்திருந்தது," என்று கம்பர் கூறும் விழுமிய பொருள் வியக்கத் தக்கதன்றோ? தோள் கண்ட வர் தோளே அழகியது என்று கூறுதல் போல ஒரு சமயத்தார் தாம் கண்ட உண்மையே மிகச் சிறந்தது என்று கூறுதல் தவறு என்றும், இராமனது ஒவ்வோர் உறுப்பும் எவ்வாறு கண்ணைக்

கவாத் தக்கதாயிருந்ததோ, அவ்வாறே எம்பெருமானைக் காணப் போந்த ஒவ்வொரு சமயத்திலும் உண்மைப்பொருள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றது என்றும் இராமனது உறுப்புக்கள் அனைத்தையும் பார்த்து முடிந்தால் இராமன் எழில்நலம் வெளிப்படுமாறு, பல சமயங்கள்தோறும் கூறுநின்ற உண்மைத் தத்துவங்களை ஒருங்கு சேர்த்து ஆராய்ந்தால் உண்மைப் பரம்பொருளின் தத்துவத்தைக் கண்டறியலா மென்றும் கம்பர் கருதுவது கருத்திலிருத்தத்தக் கது. என்னே கம்பரின் பரந்த சிந்தையும் விரிந்த நோக்கமும்!

---

## சனி நீராடு

[திரு. சேலை. சகாதேவ முதலியார்]

'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வ' மாகலான், மக்கள் உடல்நலம் பேணுதல் அவர்தமக்கு இன்றியமையாததோ ரொழுக்க மாயினமையின், அவர் அதனை யோம்பிக் காக்கவேண்டி ஒளவைப்பிராட்டியார் ஆத்திசூடி நூற்கண் 'சனி நீராடு', 'இலவம் பஞ்சிற் றுயில்', 'அனந்த லாடேல்', 'நோய்க் கிடங்கொடேல்', 'மீதூண் விரும்பேல்', 'வைகறைத் துயிலெழு', என்றோதிவைத்த கட்டளைகளுள் முதற்கண் காணப்படுவது 'சனிநீராடு' என்பதே, இதன்பொருள்-சனிக்கிழமைதோறும் உடம்பின்மேல் எண்ணெ யிட்டுத் தேய்த்து வெந்நீரில் தலைமுழுகு-என்பதாம்.

நாடோறும் நீராடவேண்டியது உடல்நலனுக்கு உரித்தாய ஒழுக்கமாம். விடியலில் பகலவன் தோன்றுமுன் தண்ணீரில் நீராடுவது சிறந்ததென்பர் ஆயுணூலறிஞர். இஃது இவ்வாறாக 'சனிநீராடு' என்றிட்ட கட்டளையின் கருத்தியாது?

நமது உடலின்கண் அணுத்துளைகள் அளவிறந்து கிடக்கின் றன. அவற்றின் வழியாக உள்ளழுக்குக்கள் வியர்வையுடன் இடை யறாது வெளியேறுகின்றமையின், உடலின்மேற்படும் குளிர்ந்த காற்றினால் அவை அத்துளைகளை வரவர அடைத்துவிடுகின்றன. இவ்வாறு உடற்றுளைகளை யடைத்த அழுக்கு நாடோறும் தண்ணீ ரிலோ வெந்நீரிலோ குளிப்பதால் முற்றும் ஒழியாது. உடலின் மேல் எண்ணெயிட்டுச் சியக்காய்த்தூள்கொண்டு தேய்த்துக்

குளிக்க அவ்வழுக்கு அறவே போக்கப்படுவதனுல் அத்துளைகள் தூய்மையாக்கப்படுகின்றன. அவை தூய்மையாகவே வியர்வை அழுக்குடன் தடையின்றி வெளியேறும். இவ்வாறு உள்ளழுக்குக் கழிய, உடல் நோய்க்கிடந்தரா நலம் பெறும்.

எண்ணெயிட்டு நீராடுவது உடல் குளிர்ச்சி யடைவதற்கேது வாகு மாதலின், அதுமீறிக் காய்ச்சலுக் கிடங்கொடா வண்ணம் வெந்நீரில் முழுகவேண்டுமென்பது உடல்நலக் கலைவல்லோர் கட்டளையாகும். 'எண்ணெய் பெறின் வெந்நீரிற் குளிப்போம்', என்பது பதார்த்தகுண சிந்தாமணியிற் கண்டது. ஆகவே 'எண்ணெயிட்டு' என்பதும், 'வெந்நீர்' என்பதும் சிறப்புவகையாற் பொருட்கண் அவாய்நிலைப்பட்டு நின்றன.

எண்ணெயிட்டு வெந்நீராடலுக்கு மற்ற நாட்கள் ஆகாதோ என ஐயம் பிறக்கலாம். நாட்கோட்களில் 'சனி'க்குச் சூடுபண்ணுந் தன்மை யுளதாதல் நோக்கி, எண்ணெயிட்டுக் குளித்தலால் குளிர்ச்சிபெறும் உடலின்கண் அக்குளிர்ச்சி தன் எல்லை கடந்து அதனை நோய் வயப்படுத்த ஒட்டாமை குறித்து, ஏழாகிய நாட்களில் சனிக்கிழமையே தக்கதென்றுணர்ந்து ஐயந் தெளிக.

இனி, 'சநிநீராடு' எனப் பாடமோதி ஜநிக்கும் (ஊறும்) நீரில், அஃதாவது ஊற்று நீரில் தலைமுழுகு என்றுரைப்பர் இராமானுஜ கவிராயர். இவ்வுரை காரணமாகக் கவிராயருக்கும் அவர் தம் மாணுக்கர் உடன்பிறந்தாராகிய விசாகப் பெருமாளையர், சரவணப் பெருமாளையர் அவர்களுக்கும், அட்டாவதானம் சபாபதி முதலியார் முன்னிலையில் புலவர் குழாத்தில் சொற்போர் நடக்க, முதலியாரவர்கள்—ஈருரையுமொக்கும்; ஆயினும் 'சனிநீராடு' என்பது ஏனழகட்கும், 'சநிநீராடு' என்பது செல்வர்கட்கும் கூடும்—என்று முடிவுரைபகர, கவிராயர், 'எதிர்ப்பக்கத்தார் ஏழை (அறிவிலி) களாக, என்பக்கமே வெற்றியாயது' என்று தருக்கி யுரையாடிப் போந்தனராம். ஒவ்வோரூரிலும் ஆறு காண்பதரிதாகையானும், கண்டாலும் பெருக்கற்ற காலத்தில் நாடோறுந் தொட்டுக் குளித்தல் யாவர்க்குங் கூடாமையானும், 'சநிநீராடு' என்பது இடம்பொருளேவலுடையார்க்கேயாம் என்பது முதலியாரவர்கள் கருத்தாகும். மேலும், ஊறுதலின்றிப் போக்கற்றவை யொழிய மற்றக் கிணறுகளுட்பட நீர்நிலைகளியாவும் ஊற்றுநீரின்பாற்படுமென்பது அறிக.

மேலும், நாடோறும் குளிக்கவேண்டியது இன்றியமையாத ஒழுக்கமே யாயினும், அதனை எடுத்துக் காட்டுவது 'உணவுதினங் கொள்' என்று கட்டளையிடுவது போன்று மிகையாகும். உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகென்று கட்டளையிட்டது போன்று, 'சனிநீராடு' என்று சிறப்பு வகையாற் கட்டளை யிடப்பட்டதென் பதே யாவருங் கொள்ளத்தக்க தொன்றும். 'வைத்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுக்குக் கொடு' என்று நமது குடும்பங் களில் வழங்கிவருகின்ற தொரு பழமொழியும் இங்குக் கூர்ந்து நோக்கற்பாலது.

மக்களின் உடல்நலத்தைக் கோரியே நமது பிராட்டியார் மேற்காட்டிய வாக்கியங்களை உலகத்துக் களித்துவைத்தனர். இவ்வாறே அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய மக்கட்குரிய நிலைபேறுடைய பொருள்களைப்பற்றிய அறிவூட்டு மொழிகள் ஆத்திசூடியின்கண் தெரிக்கப்பட்டுளவாதலைத் தமிழ்மக்கள் கண்டு இன்புறுவாராக.

---

# அருஞ்செய்யுட் பொருட் பகுதி

## திருவெங்கைக் கோவை

(44-வது செய்யுள்)

[சென்னை கோ. இராமலிங்கத் தம்பிரான் அவர்கள்]

### தலைவன் உற்றது உரைத்தல்

அஃதாவது: வாட்டம் யாது என வினவிய பாங்கற்குத் தலைமகன் தனக்குற்ற வேறுபாட்டின் காரணம் கூறுநிற்றல். அதற்குச் செய்யுள்:—

மலைவன் பணியரி வின்னுண் கணைசெய்து வந்துவெங்கைத்
தலைவன் புரமிரண் டொன்றே வெலவிச் சகமனைத்துஞ்
சிலைவன் குணங்கணை வேழஞ் சுரும்பலர் செய்து வென்றேன்
முலைவன் கிரியுற வந்தணண் பாவொரு மொய்குழலே.

(ப - ரை.) நண்பா - நண்பனே, மலை வன்பணி அரி - மலையையும் வலியபாம்பையும் திருமாலையும் (முறையே), வில் நாண் கணை - வில்லாகவும் நாணாகவும் அம்பாகவும், செய்து வந்து - செய்து கொண்டெழுந்தருளி, வெங்கைத்தலைவன் - திருவெங்கைக்கிறைவனாகிய சிவபெருமான், புரம் இரண்டு ஒன்றே வெ(ல்)ல - இரண்டொரு நகரங்களையே வெல்ல; வேழம் சுரும்பு அலர் - கரும்பையும் வண்டையும் மலரையும் (முறையே), சிலை வன்குணம் கணை - வில்லாகவும் வலியநாணாகவும் அம்பாகவும், செய்து - செய்துகொண்டு, இச் சகம் அனைத்தும் - இவ்வுலக முழுதும், வென்றோன் - வென்றோனாகிய மன்மதன், முலை வன்கிரி உற - தனங்களாகிய வலிய மலையாகிய அரணில் பொருந்த, ஒரு மொய்குழல் - ஒருமாது, வந்தள் - வந்தனள்; எ - று.

(வி - கு) வென்றோன் முலைவன்கிரியில் உற வந்தள் என்க. புரம் இரண்டொன்று - முப்புரங்கள். வென்றோன்-வினைப்பெயர். உற-வினையெச்சம்=காரியப்பொருட்டு. வந்தள்—அன் சாரியையின்றிவந்த வினைமுற்று. மொய்குழல்-அன்மொழி. கிரி - ஏழன் தொகை. வந்தள் + நண்பா = வந்தணண்பா.

வெங்கைத்தலைவன் வில் நாண் கணை கொண்டு வென்றது இரண்டொரு நகரங்களையே; மதன் வில்நாண்கணை கொண்டு வென்றது உலகமுழுதும். அத்தகைமையோன் மலையரணை அடைந்து போர் செய்ய ஒரு மாது (என்னெதிரே) வந்தனளாயின் என் வலியழிதல் வியப்போ! என்றதாயிற்று.

அன்றியும், வென்றோனது அரணாகிய முலைவன்கிரி என் மேல் உற ஒரு மொய்குழல் வந்தனள், அதனால் இவ் வேறுபாடு உண்டாயிற்று எனக் கூறினும் பொருந்தும். இப்பொருட்கு வென்றோன் - ஆறன்தொகை, கிரி-எழுவாய்.

இனி, 'வந்த நண்பா' எனப் பாடங்கொண்டு, வென்றோன்—, ஒரு மொய்குழல் - ஒரு மொய்குழலினது, மு(ல்)லை - காட்டரணையும், வன்—, கிரி - மலையரணையும், உற - உறுதலாலே, (இவ்வாட்டம்) வந்த - வந்தது; என்றலும் ஒன்று. இப்பொருட்கு 'வந்த' என்புழித் 'து' தொகுத்தல்; இவ்வேறுபாடுகள் வந்தன எனினும் அமையும்; வேறுபாடு-அஃறிணையியற் பெயராதலான். முல்லை - காடு; இது 'முலை' எனத் தொகுத்தலாயிற்று; காட்டரணை யுணர்த்திற்று; காடு—தலைவியின் கூந்தல், கிரி - தனம். அது மலையரணை

யுணர்த்திற்று. உற-வினையெச்சம், காரணப் பொருட்டு. முலை, கிரி - இரண்டன் தொகைகள். மகளிர் தனத்தையும், கூந்தலையும் மதனுக்கு முறையே மலையாணுகவும், காட்டாணுகவுங் கூறுதலை, "பாவையன்னார் கூடுங்குவிமுலைக் குன்றுங் கண்வேலையுங் கூந்த னெடுங்காடுங் கடந்து வந்தான் மிகவீரனங் காவலனே;" "மட்டுக்கணைவேலாணுக வளர்த்த குயற்கா டலர்விரவிக் கட்டுற் றது" என்பவைகளா லுணர்க.

மற்றும், வென்ருேன் மலைவன்கிரியுற ஒருமொய் குழ(லால்) இவ்வேறுபாடு வந்தது எனக்கோடலு மொன்று; குழலால்-குழலையுடைய மாதால். இஃது, 'ஐயுங்கண்ணு மல்லாப் பொருள் வயின், மெய்யுருபு தொகாஅ விறுதியான' என்னும் ஒத்திற்கு வழுவா யமைதலாற் சிறப்பிலது; எனினும் இதனை வழுவமைதி யின்கண் வழுவமைதியாகக் கோடலு முண்டென்று கொள்வாரு முளர். இதனை, குலோத்துங்க சோழன் கோவை இருநூற்றெழு பத்தேழாஞ் செய்யுளில்,

"உருமா னன்ன குலோத்துங்க சோழ னுறந்தைவெற்பிற்
பெருமா னினது வளநாடு மூரும் பெருங்குலமும்
வருமா மரபும் புகழுமெய் வாக்குமற் றேதுமென்னுந்
திருமா னிரங்கவு நீயிரங் காது திரிகின்றதே."

என்பதற்குப் "பெருமானே! திருமானிரங்கவும் நீ இரங்காது திரிகின்றதால் நினது வளநாடும் ஊரும் முதலியவை என்னுகும்?" என எழுதியவுரையானு முணர்க.

— —

### தமிழில் இன்றியமையாது

## வேண்டப்படும் உரை நடை நூல்கள்

("மதி மன்னன்" எழுதியது)

சமய, சரித்திர, மொழி, தத்துவ ஆராய்ச்சித் துறைகளில் தான்றோன்றிய காலங்கொட்டு இடையறுதுழைத்துச் செந்தமிழ் மாணவர் தம் உள்ளத்தைக் களிப்பித்து வரும் மிகச்சிறந்த செந்தமிழ் வெளியீடாகிய எம் அருமருந்தன்ன "செந்தமிழ்ச்

செல்வி ”யில் மேற்காணும் பொருள்பற்றி யோர் கட்டுரை யெழுத வேண்டு மென்று நெடுங்காலம் அவாவுற்றிருந்தேன். ஆயினும் ஆங்கில தமிழ்ப்புலமை மிகுதியுமுடைய பேரறிஞர் தம் பேருரைகளுடே அவற்றிற் குறைந்த எனது சிற்றுரைகளை (வெற்றுரையல்ல வென்பதென் றுணிபு!) ப்புகுத்தல் “செல்வியின் பேரழகையும் பெருமதிப்பினையும் குறைப்பதாகுமே யென்றெண்ணியஞ்சிப்பின் வாங்கினேன். ஆனால் அண்மையில் ஒரு ஆங்கில நூலைவாசித்துக் கொண்டிருந்த காலை என்னுள்ளத்தேயோர் புதிய வுணர்ச்சி அரும்பியது. அஃதென்னையோ வெனின்: ‘உலகில் அறிஞர் பல்லோரல்லர்; மிகச்சிலரே யாகுவர். அறிவிலிகளும் பல்லோரல்லர். அறிஞர், அறிவிலார் எனு மிருபகுதியாருக்கு மிடையே நடுவகுப்பினருளர். அவரே உலகிற் பெரும்பாலார், உலகம் அவராலேயே நடைபெறுகின்றது. அறிஞரது பல்வேறு திருத்தொண்டுகளை, மெய்ப்பணிகளை, உயரிய ஊழியங்களை மெச்சிப் போற்றி ஊக்கி அறிஞருக்கு ஆதரவளிப்போர் நடுவகுப்பினரேயாம். ஆதலின் நடுவகுப்பினனாகிய யான் என்போன்றாருக்கு எத்தகைய நூல்கள் தமிழில் எழுதப்படல் வேண்டு மென்பதை அறிஞருக்கு எடுத்துக் கூறுதற்குத் தகுதியுடையே னென்பதேயாம்.

மேற்குறிப்பிட்ட புதிய வுணர்ச்சியே யிதனை யெழுதுமாறு என்னைத் தூண்டிற்று. யான் ஒரு புலவனல்லன்; அறிஞனுமல்லன். ஆண்டு, அறிவு, அநுபவங்களிற் குறைந்தவன். ஆயினும் அறிஞரது நூற்களை வாசித்தறிந்து மதிப்பிடுந் திறனுடையேன். ஒரு செந்தமிழ் மாணவனென்க. எனவே யானெழுதுவதைக் கற்றூர் கவனிப்பாரென நம்புகின்றேன்.

## பண்டைத் தமிழ்நூல்கள்

படிக்குந்தோறும், படிக்குந்தோறும் இன்பச் சுவையூட்டும் பண்டைத் தமிழ் நூல்களனைத்தையும் யான் அறியேனாயினும் எனக்குத் தெரிந்த அளவில் அவை ஒப்பும் உயர்வுமற்ற சீரிய பொற்கட்டிகளென்ப தென்றுணிபு. அக்காலத்திருந்த எம்முன்னோர்கள் எத்துணை உயரிய நிலையிலிருந்தனரென்பதை அவை தெள்ளத்தெளிய விளக்குகின்றன. செந்தமிழின் தூய்மையும், புனிதமும், நிறைவும், தமிழ் மக்களின் இயற்கை வாழ்வும்.

உரிமையும் இன்னபிறவும் ஆங்கு யாங் கண்டகமகிழுஞ் செம்பொருட்கள். அத்துணை மேம்பாடுடைய நூல்களை முதனூல்களாகத் தம் தாய்மொழியாகுந் தமிழில் இருக்கப்பெற்றுள்ள தமிழர் பெருமையுடையவரே யாவர். இளங்கோவும், சீத்தலைச் சாத்தனும், வள்ளுவனும் இயற்கைக்கியைந்து நூலியற்றினர்கள். அவர்களது நன்னூல்கள் சிலவேயாயினும் அவை சிறந்தவையே. தம் பின்னோர்கட்கென அப்பெரியார்கள் அரும்பாடுபட்டுழைத்த தேடிய அத்திரவியக்குவியல்களை நாங்கள் எவ்வாறு மதிக்கின்றோமென்பதை அப்புலவர்களறியக் கூடுமேல் அவர்களது உளங்கள் பெரிதுந் துன்புறுமென்பதில் ஐயமேயில்லை.

## இடைக்காலத்தெழுந்த வழிநூல்கள்

தமிழ் மக்கள் அரசுரிமையையும், அதனோற்கிட்டும் பிறப்புரிமையையுமிழந்த பின்னர் தமது உயர்தனிச் செம்மொழியில் முதனூலாக்குந் திறனை யிழந்தனர்போலும்! வடமொழி நூற்களைத் தமிழில் மொழிபெயர்த்து வழிநூல்களியற்றிய இடைக்காலப் புலவர்கள் இயற்கையை மறந்தனர்; உண்மையைத் துறந்தனர்; ஒன்றைப்பத்தாய்ப் பெருக்கி உள்ளம் சென்றவாறு உளறிக் குழறிக் கொட்டினர். பண்டைத்தமிழ் நூல்களின் இயற்கையினிமை இடைக்கால வழிநூல்களில் இல்லாதொழிந்தது. முற்கால முதனூல்களுக்கும் இடைக்கால வழிநூல்களுக்கும் பெரிதும் வேற்றுமையுண்டு. ஒன்று இயற்கை மணங்கமழ்வது, மற்றது செயற்கை வாசனை வீசுவது, முன்னது உள்ளத் தூய்மையையும் புலவர் தம் வாய்மையையும் எண்பிப்பது, பின்னது உள்ளக்கரவையும், கறையையும், கருத்தற்ற வெறுஞ் சொற்றொடர்களையும் காண்பிப்பது. உலகில் நல்ல பொருட்கள் மிகக் கொஞ்சமேயன்றோ! அவ்வாறே சிறந்த முதனூல்கள் சிலவே. ஆயின் தமிழ் மக்களின் செயலற்ற சோம்பற்றனத்தை விளக்கும் வழிநூல்கள் நூற்றுக்கணக்கா யிருக்கின்றன. இவற்றைப் போற்றிப்புகழ்வோரோ பல்லோராவர்.

## தற்கால நூல்கள்

இனி இக் காலத் தெழுந்துள்ள நூற்களைப் பற்றியென்ன? முதனூல்களும், வழிநூல்களும் செய்யுளிலிருக்கின்றன. உரை

நடை நூல்கள் அக் காலத்திலியற்றப்பட வில்லை. கல்வியறிவு நிரம்பிய அக் காலத்தோர் எதனையுஞ் செய்யுளிற் செப்பினர். இக் காலத்திலெழுதப்படும் தமிழ் நூல்களில் "நூல்கள்" எனும் சிறப்புப் பெயருக்குத் தகுதியுடையவை மிக மிகச்சிலவே. மற்றெல்லாம் சொன்னயம், பொருணய மற்ற இலக்கணவழுக்கள் நிரம்பிய கருத்தடக்கமிலா கறைகளுடைச் சுவடிகளாகும். ஆங்கிலக் கல்வியின் மிகுதியால் தமிழ் மாணவர் ஆங்கில நூற்களை பயிலுதலிற் றம்கருத்தைச் செலுத்தித் தமிழ்க் கல்வியைக் கைவிட்டனராக அரைகுறைப் படிப்பினரான சிலர் தமக்கு "ஆசிரியர்" என்ற பட்டத்தைத்தாமே சூட்டிக்கொண்டு ஆங்கிலக் கற்பனு சரிதைகளைத் தமிழில் மொழிபெயர்த் தெழுதிவருகின்றனர். அச்சியந்தரம் மலிந்த பண்டமாய் விட்டபடியால் கற்பனு கதாசிரியர் மிக எளிதில் தமது தொழிலை நடத்தி வருகின்றனர். இக் காலத் தெழுதப்படும் உரை நடை நூல்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது வீதம் வெறுங் கதைகளாகவே யிருக்கின்றன. கதைகளையன்றி வேறெதும் செந்தமிழ்மக்கட்குத் தேவையில்லை யென்று எங்கள் 'நூலாசிரியர்' கள் எண்ணுகின்றனரா?

## கற்பிதக் கதைகள்

மேலே குறிப்பிட்டவண்ணம் கற்பிதக் கதைகள் இக்காலம் மிகுந்துவருகின்றமையால் அவற்றைப் பற்றி ஈண்டுச் சற்று விரிவாய் ஆராய்தல் பயனுடைத்தாகுமென் றெண்ணுகிறேன். முதன்முதல் "நாவல்" (Novel) எனும் ஆங்கிலச் சொல்லுக்கேற்ற தமிழ்ச்சொல் யாது? "நாவல்" என்றே தமிழில் எமது "ஆசிரியர்" வழங்குவது அவர்களது மூளைவறட்சியையே சுட்டுகின்றது. இனி, "கற்பிதக்கதை" என்று சிலரும், "கற்பனு சரிதை" எனச் சிலரும் சொல்லாநிற்க வேறுசிலர் "நவீனம்" என்கின்றனர். "புதுக்கதை" என்றூர் மறைமலையடிகள். அதுவும் பொருந்தாப்பெயரே. புதுக்கதையிதுவெனின் பழங்கதை யெது? என் "புதினம்" என்று சொல்லலாகாது? இதுபற்றி அறிஞர் தம் கருத்தை வெளியிடுவாராக. இது கிடக்க, தற்கால உரைநடை நூலாசிரியர்களுள் தலைசிறந்துள்ள இருவரில்—மறைமலையடிகளையும், திருவாளர். கலியாண சுந்தரரையுங் குறிப்பிடுகிறேன்—பின்னவர் கற்பனு கதைகளைக்

கண்டித் தொதுக்கிவிட முன்னவர் இரு கதைகள் இயற்றிக் கதைகள் மக்கட்கு அவசியந்தானென்பதை வலியுறுத்தி யிருக்கின்றார். கதைகளிலும் முதனூலும், வழிநூலு மியற்றலா மென்பதற்கு அடிகளது "கோகிலாம்பாள் கடிதங்களும்," "குமுதவல்லி"யும் சான்று பகருகின்றன. "கோகிலாம்பாள் கடிதங்கள்" அறிஞர் உளமகிழு முறையில் மிகச் செவ்வையாகச் செய்யப்பட்டிருக்கிற தென்பதென்றுணிபு. ஆனால் அடிகள் ரேய்னல்ட்சு என்ற ஆங்கிலக் கதாசிரியனது காமச்சுவை ததும்பிக் கயவரே போற்றும் இழிந்த கதைதனைத் தமிழில் மொழி பெயர்த்த தெற்றுக்கோ? தமிழ் நாட்டில் இடைக்காலத் தெழுந்த புலவர்கள் வடமொழியிலுள்ள சிறந்த நூற்களை விட்டு இராமாயணத்தையும், பாரதத்தையும், புராணத்தையும் மொழி பெயர்த் தெழுதித் தமிழ் மொழியின் உயர்வைத் தாழ்த்தினதற் கொப்ப தற்காலக்கதாசிரியரும் ஆங்கில நூல்வல்லோரான Scott, Dickens, Thackeray, Peate, Kingsley போன்றோரியற்றிய சிறந்த கற்புடைக்கதைகளைக் கவனியாதுவிட்டு ரேய்னல்ட்சு என்ற காமுகன் கதைகளை நேரே மொழிப் பெயர்த்தும் தழுவியெழுதியும் வருதலானது எத்துணை தூக்கத்திற் கிடனானது! மறைமலையடிகளது "குமுதவல்லி" யென்ற கதையையே ஆரணி குப்புசாமி முதலியார் "மங்கைபுர மாணிக்கம்" என்றெழுதி யிருக்கின்றார். அடிகளது தனித்தமிழ் உரை நடை நூல்களை வாசித்துப் பெரும் பயனெய்திய யான் "குமுதவல்லி" யால் உளங்குறைந்தேன். நிற்க,

வெறுங் கதைகளை மட்டும் அலங்காரச் சொற்களாலாக்கி விளம்பரஞ் செய்து, பொருளீட்டித் தாம் அரியசேவையைச் செய்திட்டதாக மகிழ்ந்துவரும் இக்கால நூதன கதைக்காரரால் பெரும்பயன் தமிழ் மொழிக்கு விளையாது. ரேய்னல்ட்சு என்பானெழுதிய கதைகளிற் காணும் காமச் செயல்களும், வஞ்சனை சூது முதலியனவும், இயற்கைக்கு மாறுபட்ட செய்திகளும், இன்னோரன்ன பிறவும் ஒரு காலத்தில் ஆங்கில நாட்டில் சிற்சில விடங்களில், பெருங்குடும்பங்களில் நிகழ்ந்திருக்கலாம். ஆனால் அவனெழுதிய கதைகளின் பெயரையும், ஆட்களின் பெயரூர்கள், உடை நடை பாவனைகளாதிய வற்றையும் மாற்றித் தமிழ் நாட்டில் அந்நிகழ்ச்சிகளை நிலை நாட்டி விவரித்தல் அழகாமோ? பொறுப் புள்ளோர் செயலாமோ? செயலற்ற சோம்பரே "ரேய்

னல்ட்சின் "இங்கிலாந்தை"த் தமிழகமாக மாற்றத்துணிவர்! ஆரணி குப்புசாமி முதலியார் எழுதிய கதைகளிற் பெரும் பகுதி ரெய்னல்ட்சின் குப்பைத் தொட்டிச் சரக்குகள் தாம். அவற்றையே வெறு முறையில், புதிய கோலத்தில், இனிய தொனியில் வடுவூர். துரைசாமி அய்யங்கார் ஆக்கியிருக்கின்றார். இவ்விருவரையன்றி வேறு பலரும் ரெய்னல்ட்சைப்பின்பற்றி—அவன் அடிச்சுவட்டைப் பின்பற்றி!—நடக்கின்றார்! அம்மம்ம! எத்தனை அந்தரங்கங்கள்! எத்தனை இரகசியங்கள்! எத்தனை மர்மங்கள்! எத்தனை மறைவுகள்! செயலற்ற சோம்பரின் பயனற்ற வார்த்தைகள்! வள்ளுவனே! இளங்கோவனே! சித்தலைச்சாத்தனே! நம்பின்னோர் தம் இழிநிலையை யறியீரோ?

(தொடரும்.)

---

# மதிப்புரை

## தண்டிகைக் கனகராயன் பள்ளு.

(இஃது யாழ்ப்பாணக் குடியேற்ற ஆராய்ச்சியுடன், யாழ்ப்பாண ஆரிய திராவிட பாஷாபி விருத்தி சங்கத்தாரால் வெளியிடப்பட்டதாகும். இதன் விலை அணா பத்து. வேண்டுவோர் திரு. J. T. சதாசிவ ஐயர் அவர்கள் யா-ஆ-தி-பா-வி-சங்க காரியதரிசி, வித்தியாகந்தோர், யாழ்ப்பாணம் என்ற விலாசத்திற்கு எழுதிக் கொள்ளவும்).

அந்தாதி, ஊசல், இரட்டைமணி மாலை, நான்மணி மாலை, மும்மணிக்கோவை, கலம்பகம், கோவை என்பன போன்று பள்ளிசை அல்லது பள்ளு என்பதும் பிரபந்தங்களில் ஒன்றாகும். பள்ளுப்பாட்டு, உழத்திப்பாட்டு என்றும் இதனை வழங்குவர். ஏரோர்களவழி என்று தொல்காப்பியத்திற் குறிப்பிடப்பட்ட அறக்கள வேள்விக்குரிய பிரபந்தம் இதுவாகும். வேளாண்மக்கள் விளையுட் காலத்து நெற்கதிரைக்கொன்று களத்திற் குவித்துப் போர் அழித்து அதரிதிரித்துச் சுற்றத்தோடு நுகர்வதும் நுகர்வதற்கு முன்னர்க் கடவுட்பலிகொடுத்துப் பின்னர்ப் பரிசிலாளரும் வினையாளரும் முகந்துகொள்ள வரிசையின் அளிப்பதுமாகிய வேளாண் வாகையைக்குறித்து நாற்பத்தெட்டு உறுப்புக்கள் கொண்டதாக இப் பிரபந்தம் யாக்கப்படும். ஒரு பாட்டுடைத்தலைவனைக்கொண்டு அவன் பெருமைகளைப் பாட்டில் ஆங்காங்கு எடுத்துக்கூறிச் சிந்து, கலிப்பா, விருத்தம், தருவாகிய பாவின வகைகள் விரவப்பெற்று நாடகத்தமிழாய் வருவது பள்ளு என்னும் இவ்வுழத்திப் பாட்டு.

பண்டைக் காலந்தொட்டு வயல்களில் வேலை செய்வோர் ஏர் பூட்டி உழும்போது ஏர்மங்கலமென்னும் பாட்டும், கொத்து நாற்றுநடுகை, அருவிவெட்டு, இவைகட்குரிய பாட்டுகளும், நெற்போர் குவித்துக் கடா விட்டுப் பொலி தூற்றி அளக்கும்போது பொலிப்பாட்டு என்னும் முக வைப்பாட்டும் நெற்பரிசில் பெறுவோர் பாடும் கிணைநிலைப்பாட்டும் எனப் பலவகையான பாட்டுகளையும் நெற்போர்க்களத்திற் பாடுவது தமிழ் நாட்டு வழக்கு; ஆயினும் அது இற்றைநாளில் பெரிதும் அருகி வருகின்றது.

இந்நிலையில், 140 ஆண்டுகட்குமுன் மாவைச் சின்னக்குட்டிப்புலவர் என்பார் கார்காத்த குலதிலகராயும், யாழ்ப்பாண நாட்டுத் தெல்லிப்பழையிற் கார்காத்த குடிபதிப்பாளராயும் மிளிர்ந்த தண்டிகைக் கனகராயன் முதலியாரின்மீது தண்டிகைக் கனகராயன் பள்ளு என்று பாடியுள்ள பிரபந்தத்தை யாழ்ப்பாண ஆரிய திராவிட பாஷாபி விருத்தி சங்கத்தார் பதிப்பித்துத் தமிழுலகுக்கு நலமூட்ட வந்தது பெரிதும் போற்றற்குரியதாகும்.

இந்நூலின் அநுபந்தமாக திரு. வி. குமாரசாமி என்பார் யாழ்ப்பாணக் குடியேற்ற ஆராய்ச்சி யுரை யொன்று எழுதிச் சேர்த்துள்ளார். ஆராய்ச்சிக்கே இலக்கணமாயுள்ளதென்று கூறத்தக்க இக்கட்டுரையின்கண் பல உண்மைகள் ஆராய்ந்து முடிவுகட்டப் பட்டுள்ளன. அவற்றுள் "சத்திய புத்திரர் என அசோக சாசனத்திலும் இளங்கோசர், கோசர் எனப் பழைய தமிழ்நூல்களிலுங் கூறப்பட்ட குழுவினரே சத்திய விரத க்ஷேத்திரமெனப்படும் கச்சி நெறிக்காரைக்காட்டுப் பிரதேசங்களிற் குடியேறினர்கள் என்பதும், இவர்களே பிற்காலத்துக் காரைக்காட்டு வேளாளரெனச் சொல்லப்பட்டவர்களென்பதும், யாழ்ப்பாண சரித்திர நூல்களாகிய கைலாசமாலையிலும் வைபவமாலையிலும் தெல்லிப்பழையிற் குடியேறிய சண்பக, சந்திரமாப்பாணர்களிருந்து வந்ததாகச் சொல்லப்படும் "வாலி நகர்" "வாவிக்கை நகர்" என்னும் இடம் "காரைக்காட்டுப் பிச்சன் கையாலித் தேவர்" ஸ்தலமாகிய காரைக்காட்டுப் பிரதேசமே என்பதும், தெல்லிப்பழையிற் குடியேறியவர்கள் காரைக்காட்டு வேளாளர் வகுப்பினரே என்பதும் வெகு திறமையுடன் ஆராய்ந்து நிறுவப்பட்டமை ஆராய்ச்சி வல்லார் யாவரும் கூர்ந்து நோக்கற்பாலதாம்.

இச் சீரிய சிறுநூல் பொதுவாகத் தமிழ்நாட்டாராலும், சிறப்பாக வேளாளராலும், கருத்தாகக் கார்காத்த வகுப்பினராலும் ஏற்றுப்போற்றி வருதற் குரிய தொன்றாகும்.

## பெரிய புராணக் கீர்த்தனை (முதற்பாகம்)

தமிழ் இசை நூல்கள் அருகி வழங்கும் இக்காலத்தில் ஒப்பரிய பெரிய புராணத்தை அடிப்படையாகக் கொண்டு காரைக்காலம்மையார் புராணம் வரையில் ஒவ்வொன்றையும் கீர்த்தனைகள் வடிவமாக, மழவாபுரி சிதம்பர பாரதிகளும் அவர் திருக்குமாரர்களும் இயற்றியுள்ளது பெரிதும் பாராட்டற் குரியதாகும். இவ்வழகிய நூலின் விலை ரூபா இரண்டு.

---

